பாம. ஷா. திநொவுகரசு

128

செப்பறை மடாலய வெளியீடு நீர். 2

உ

திருச்சிற்றம்பலம்

# செப்பறை உலா

## செப்பறை மடாலய வரலாற்றுடன்



பதிப்பாசிரியர்:

பு. சி. புன்னைவனநாதன்

1958



இம்பீரியல் அச்சகம், திருநெல்வேலி

# பதிப்புரை.

இவ்வுலா இராசை — செப்பறை மடாலய நூல் நிலையத்தி லுள்ள ஏட்டுப் படியினின்றும் எடுத்து வெளியிடப்படுகிறது. இவ் வேட்டுப்படியில் சில சில இடங்களில் எழுத்துக்கள் மாறுபட்டும் சீர்கள் சிதைந்தும் இருந்தவற்றை பொருள் தொடர்ச்சிக்கும் இடத் துக்கும் அமையச் செப்பஞ் செய்து பதிப்பித்துள்ளோம். இதற்கு முன் இம்மடாலய வெளியீடாக எம்மால் பதிப்பிக்கப்பெற்ற ஏட்டுப் படியில் அமையாத சிலகருத்துக்கள் திருநெல்வேலித் தல வரலாற் றினையும் செம்மைப் படுத்தும் வழியில் அமைந்துள்ளன. இப்படி அச்சிடத் தொடங்கி அரை ஆண்டாக நேரினும் அச்சிட்ட சில பகுதி கள் இராசவல்லிபுரம் செப்பறைத் திருக்கோவில் திருநெல்வேலி, சிவபூசைச் செல்வர் திருக்கூட்டத்தின் நாலாவது ஆண்டு நிறைவு விழா ஏவிளம்பி தை – 8–ல் செப்பறை திருக்கோவிலில் பழனி காசிவாசி, சித்தாந்த மகா மகோ உபாத்தியாயர் சிவத்திரு, ஈசான சிவாசாரியர் அவர்கள் தலைமையில் நடைபெற்ற காலத்தில் அன்பர்கள் விருப்பிற்கிணங்கப் படித்துக்காட்டப்பட்டுள்ளன. இவ் உலா ஆசிரியர் இம்மடாலயத்தின் 9-வது பட்டமாக எழுந்தருளிய இரண்டாவது அழகிய கூத்த தேசிகப் பெருமான் ஆவர் பின்னர் செப்பறை மடாலய வரலாறு சைவ மக்கள் அனைவர் களும் அறிந்து மகிழும் வண்ணம் வெளியிடவேண்டுமென்று இராசைசேவுடை பூசை சங்கரலிங்கம் பிள்ளை முதலிய அறிஞர்கள் விரும்பியபடி இம்மடாலய குருமார்கள் செய்யுளிலும் உரை நடை யிலும் எழுதி வைத்திருந்த ஏடுகளைக்கொண்டு இப்பொழுதைய 14 வது பட்டம், மடாதிபதி தவத்திரு, அழகியகூத்த தேசிகர் அவர்களால் எழுதப் பெற்ற வரலாறும் சேர்த்துப் பதிப்பிக்கப் பெறுவதாயிற்று.

இப்பதிப்பினையும் இதற்கு முந்திய கனகசபைநாதன் உலா வையும் நன்கு ஆய்ந்து சொற்செறிவு, பொருட் செறிவு சாத்திர நுட்பம் உலகியலுணர்வு வரலாற்று நுட்பம் முதலியவற்றின்

பாங்கினைத்தெளிந்து மகிழ்ந்த நண்பர் மதுரை தியாகராசர்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் "சித்தாந்தகலாநிதி" திருஔவைதுரைசாமிப் பிள்ளை அவர்கள் அணிபெற எழுதிய முன்னுரையும் இப் பதிப்பை அழகு படுத்துவதாம்.

முன்னுரை உதவிய சிறந்த ஆராய்ச்சி உரை ஆசிரியராகிய திரு. ஔவை துரைசாமிப் பிள்ளை அவர்களுக்கும், அச்சிடுங் காலத் தில் ஏட்டுப்படியும் கைப்படியும் ஒப்புநோக்கி திருத்தவுதவிபுரிந்த எம் இயற்றமிழ் மாணவர்களுக்கும் இந்நூலை முன்னூல்போல் ஊன்றிப்பார்த்தச்சிட்டு உதவிய நெல்லை இம்பீரியல் அச்சகத்தார்க் கும் எம் அன்புறு நன்றி உரித்தாகின்றது.

மடாலயத்திலுள்ள பழைய ஏட்டுச் சுவடிகளில் நாட்டுக்கும் சைவ வளர்ச்சிக்கும் பயன்பெறுவனவற்றைத் தேர்ந்து வெளியிட முன் வந்துள்ள செப்பறை மடாதிபதி தவத்திரு. அழகிய கூத்த தேசிகர் அவர்களுக்கு எம்போல் தமிழக மக்களும் சைவ நன் மக்களும் பெரிதும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையவர்களாவார் கள்.

செந்தமிழும் சைவமும் உடலும் உயிரும்போல் திகழும் உண்மை தெளியும் திருக்கோவிற்றலைவர்களும் சைவாதீனகர்த் தர்களும் தங்கள் தங்கள் நூற் கருவூலங்களில் பதுங்கிக் கிடக்கும் பலவகை மணிகளையும் பரந்த உலகினர் மதித்துப் போற்றும் வகையில் வெளிப்படுத்திச் சிறப்புறும் வண்ணம் இறைவன் திரு வருள் புரியும்படி அன்னவன் பொன்மலரடிகளை அன்புடன் வழுத்தி வேண்டுகிறேம்.

சிவஞான சிவாசாரியார்
**பு. சி. புன்னைவனநாதன்**
புலவர் குழுத் தலைவர்,
தென்னிந்திய தமிழ்ச் சங்கம்,
திருநெல்வேலி.

புலவரகம்
விளம்பி
வைகாசி 10

மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்,
சித்தாந்த கலாநிதி, சைவத்திரு.
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்
எழுதிய

## செப்பறையுலா முன்னுரை

செந்தமிழ் வளரும் தென்னாட்டுத் தண் பொருநைக் கரையில் உள்ள நகரங்களில் தலை சிறந்து விளங்கும் திருநெல்வேலிக்கு அண்மையில் இராசவல்லிபுரத்தில் சைவமும் தமிழும் ஒருங்கு வளர்க்கும் பெருங்கடமை மேற்கொண்டு ஆற்றி வரும் சிவஞானத் திருமடங்களுள் செப்பறை மடம் பழமையான சிறப்புடைய ஞான நிலையமாகும். இது, திருவெண்ணெய் நல்லூரில் தமிழ்ச் சைவ நன்மக்கள் செய்த பெருந் தவப்பயனாகத் தோன்றிய மெய்கண்ட தேவ நாயனாரைத் தலைவராகக் கொண்டு தோன்றிய சித்தாந்த சைவத் திரு மடமாகும்; வாழையடி வாழையாகப் பெரு ஞானிகள் பலர் தோன்றி அருளாட்சி செலுத்திய பெருமையுடையது; தமிழ் மரபு குன்றாது சைவ நெறி தழைத்தோங்க உழைக்கும் சால்பினால் நிறைந்த வாய்மையுடையது; இன்று தவத் திரு. அழகிய கூத்த தேசிகர் அவர்களின் அருளாட்சியில் சிறப்புற்று விளங்குகிறது.

இத் திரு மடத்தின் சிவஞான மரபில் தோன்றிய அருளாசிரியன்மார்களுள் ஒருவரால் செய்யப்பெற்று இதுகாறும் அச்சில் வராதிருந்த இவ்வுலா நூல், இப்பொழுது சிவஞானசிவாசாரியராகிய சைவத் திரு. பு. சி. புன்னைவனநாதன் அவர்களால் ஒப்பனை செய்யப் பெற்றுச் செப்பறை மடத்தின் வெளியீடாக வருகிறது சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன் இத் திரு மடத்தின் வெளியீடாகச் "செப்பறைக் கனகசபை நாதன் உலா" என்ற நூல் வெளிவந்தது; இப்போது இந்த உலா நூல் வெளியிடப்படுகிறது. இவ்விரண்டு உலா நூல்களையும் ஒருங்குவைத்துப் படித்துச் சுவை காண்போர் "கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்" என்ற தமிழறிஞர், இந்நூல்களைக் காணாமையால் அவ்வாறு கூறினாராதல் வேண்டும் என நினைப்பர்.

தமிழ் இலக்கிய உலகில் உலா நூல் வகையுள் காணப்படு வன போலவே இந்நூல் அமைந்திருக்கிறது; என்றாலும், ஏனைய பிறவற்றுள் காணப்படாத நலங்கள் பல மல்கியுள்ளன. செப்பறை என்ற திருப்பதி தோன்றிய வரலாற்றை இவ்வுலா நூல் எடுத்த எடுப்பிலே மிக்க இனிய முறையில் உரைக்கின்றது. செப்பறை திருநெல்வேலிக்கு அண்மையில் இருப்பதும், அங்கே கூத்தப் பெருமானுக்குச் செம்பினால் மன்றம் அமைத்திருப்பதும் நாடறிந்த செய்தி. இதனை

செம்பினாற் செய்த திருமன்றத் தாடும் அருள்
எம்பிரான்; எங்கும் இருந்தபிரான் உம்பர்தொழும்
நெல்வேலி வாழ்வோன் நினைவோர்க் கருள் என்னும்
நல்வேலி யிட்ட நதிச் சடையன்''

என்று குறிக்கின்றது.

மங்கையர்க்கரசியாரைக் கோப்பெருந்தேவியாகவும் குலச் சிறையாரை நல்லமைச்சாகவும் கொண்டு மதுரையில் இருந்து ஆட்சி புரிந்த பாண்டியன் நெடுமாறன், திருஞானசம்பந்தரால் தூய சைவனாகித் தென்பாண்டி நாட்டைச் சிவலோகமாக்கிய சிறப்புடை யன் என்பதைத் திருத்தொண்டர் வரலாறு செப்புகிறது. அச் செய்தியை இவ்வுலா நூல் சுமார் 20 கண்ணிகளில் ஓர் அழகிய அரசமரமாக உருவகம் செய்து காட்டுகின்றது.

நெடுமாறன் சமணருளின் நீங்கிச் சைவவொளிபெருகுதற்கு முன் நெல்வேலிக்கண் தன்னொடு நேர்நின்று பொருத பகை வேந் தரை வென்று ''நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன்'' என்ற சிறப்புப் பெயர் பெற்றவன். அவன் சைவனாகிய பின் நெல்வேலியில் தங்கியிருக்கையில் நெல்லைத் திருப்பதி எல்லாம் கருணைச் செல்வன் உருவாய்'' தோன்றிற்று; அதுகண்ட வேந்தன் அங்கே இருத்தல் கூடாது என அஞ்சித் தாமிரபரணியின் தென் கரையில் மூன்றீச்சுரமுடையார் கோயிற்கு அருகே பாடியிட்டிருந்

தான். ஒருநாள் ஆயன் ஒருவன் போந்து தெரிவித்த செய்தி கேட்டு வருந்திய வேந்தன் கனவில் நெல்வேலிச் செல்வர் தோன்றி, "நெல்லை யென்னும் பொற்பதிக்கு நேராகத் தோற்றும் அந்தச் செப்பறையாம் தூயதலம்" என்றும்

பொன் மன்றும் வெள்ளிப்பொருப்பின் மன்றும் செம்பினிற்செய்
மன்மன்று இம் மூன்று மணிமன்றும் — நன்மன்று
நீங்காமல் நின்று நிருத்தம் செய்வோம்; அவற்றுள்
பாங்கான நெல்லைப் பதிமன்றம் — ஒங்குபுகழ்
செப்புமன்றம்; அந்தத் திருமன்றுடையோம் நாம்
இப்பதியில் ஆகும் இயைபினல் — செப்பறையாம்
இந்தப்பதியில் எமை இருத்தி எப்பொழுதும்
வந்திப்பாய்; நெல்வேலி வந்திறைஞ்சும் — அந்தப்
பலம் அருள்வோம்"

எனப் பகர்ந்தருளினரென்றும் வருவனவற்றல் இச் செப்பறைத் திருக்கோயில் ஞானசம்பந்தர் காலத்தவனன பாண்டியன் நின்றசீர்நெடுமாறனல் அமைக்கப்பெற்ற தொன்மையுடைய தென்பது நன்கு தெளிவாகிறது.

செப்பறைப்பதியில் திருக்கோயில் அமைத்த பாண்டிவேந்தன் திருவீதியுலா வருதற்குரிய அழகியகூத்தன் திருவுருவம் அமைக்கப் பெரு முயற்சி செய்தான். அவன் முற்போந்த தச்சர் பலரும் "அற்புதனைச் செய்ய அரிதாம்" என்றர். தெய்வத் திருச்சிற்பம் வல்லான் ஒருவன் தில்லையில் இருப்பது உணர்ந்து அவனைக் கொணர்ந்து "எழுதரியோன் தன்னை இயற்றுய்" என வேந்தன் வேண்ட, அவன் சிவஞான தியானக் காட்சியால் மனத்தே கண்டு, அழகிய கூத்தன் திருவுருவுருவை வேந்தனையுள்ளிட்ட அனைவரும் கண்டு மனமுருகிக் கண்ணீர் வருமாறு செய்தமைத்தான்.

மார்கழித் திங்கள் நிறை மதி நாளில் அழகிய கூத்தப் பெருமான் திருவீதி உலாப் போந்த நிகழ்ச்சியே இச் செப்பறையுலாவில் கூறப்படும் சிறந்த செந்தமிழ்ச் செய்தியாகும்.

"தெள்ளுதமிழ்ச் செப்பறை நல் வீதி தனில்," தேவரும் மூவரும் யாவரும் சூழ்வர அழகிய கூத்தப் பெருமான் திருவுலா வருகின்றான். அக்காலையில் "உருகும் அருள் சம்பந்தர் அப்பர் தமிழ்ச் சுந்தரர் கருணைக் கம்பஞ்செய் வாத வூரன் கருவூர் நம்பன் முதலாம் தமிழ்ப்புலவோர்" முன் நின்று போற்றுகின்றனர்; தில்லை வாழ் அந்தணர்கள் முன்னாகிய மறையவர் வேதம் ஓதுகின்றனர். நின்றசீர்மாறன் முதலாகிய வேந்தர் ஒருபால் வர, இல்லையென்னாத இயற்பகையும் இளையான்குடிமாறனும் கண்ணப்பரும் சண்டேசுரரும் பிறரும் ஒருபால் வருகின்றனர்.

"................ அகில மெல்லாம் — என்னும்
உலகா யதமாய்ப் போகாமல் ஓங்கும்
மலகாமியம் ஒழித்தோன் வந்தான் — நிலையான
ஞானம் குழவியெனும் நல்ல கதிராற்புத்தர்
ஈனஒழுக்கம் எனும் இருளைத் தானமற
ஓட்டி உலகுக் கொருவன் எனவே தன்னை
நாட்டும் கருணை நடன் வந்தான்"

என்பன முதலிய சிறப்புக்களைச் சின்னங்கள் பரிமாறின. பேதை பெதும்பை முதலிய பல்வகைப் பருவத்து மகளிர் திருவுலாப் போதரும் கூத்தப்பெருமானைக் கண்டு கருத்தழிந்து மெலிகின்ற காட்சிகள் ஆங்காங்கு அழகுறக் கூறப்படுகின்றன.

ஒரு சில நூல்களைப்போலப் படிப்போர் உள்ளத்தைச் சிற்றின்ப வுணர்ச்சியாகிய சேற்றில் அழுத்திச் சீரழிக்காமல் கண்ணிதோறும் சிவவுணர்வும் சைவ வொழுக்கமும் சிவஞானச் செய்திகளுமே சிறந்து நிகழ இவ்வுலா நூல் அமைந்திருப்பது படிப்போர்க்குச் சிவஞான சாத்திரமொன்றைப் படிப்பது போலும் உணர்வே நெஞ்சில் நிலவுமாறு செய்கிறது.

செப்பறைக் கூத்தப் பெருமான் திருவீதியுலாவருகையில் கண்டிருந்த பேதைப் பெண்ணொருத்தி அருகே நின்ற தாயரை நோக்கி தன்னை அவன் திரு வடிக்கீழ் வைக்குமாறு வேண்டுகின் ருள். அப்பெண்ணின் கண்கள் நலம் கூற வந்த ஆசிரியர், "நாடரியோன், உள்ளம் சிறந்தோர்க்கு உரைத்த சீர் ஆகமம் போல் கள்ளம் பிறவாத கண்ணிஞள்'' என்று கூறுகின்ருர். அப்பெண் ணின் விருப்பம் கண்ட தாய்மார் கூறுவது அவரது ஞானப் பேரு ணர்வின் பெருமையைப் புலப்படுத்துகின்றது அத்தாயர், மகளே!

நம்மால் அவன் அடிக்கீழ் நண்ணல் எளிதோ? கருணைப்
பெம்மான் தனை நினைந்து பேதமறச் — சும்மா
இருந்தவர்க்கும் அல்லால் இமயமயில் பங்கன்
பொருந்து கயிலைக்குப் போக வருந்தித்
தலையால் நடந்த அருள்தையலைக்கண்டு ஐயன்
மலர்வாயால் அம்மாவா என்னத் — தொலையாத
அப்பனேஎன்று அவளைப்பார்த்து ஐயன் வேண்டியதென்
செப்புவாய் என்னத் திருக்கண்ணுல் — அப்புதிர்த்து
வேண்டும் வரமாவது இத்தனையே வெள்ளநீர்
ஈண்டும் சடையாய் இசைவையேல் — மீண்டும்
பிறவாமை வேண்டும் பிறப்புண்டேல் உன்னை
மறவாமை வேண்டும் வரம் என்று — அறம் உரைக்கும்
காரைக்கால் அம்மைக்கும் கல்லால் கழலடிக் கீழ்ச்
சேரல் எளிதல்ல தேனே"

என்று உரைக்கின்றனர்.

இவ்வாறே மடந்தைப் பருவத்து நங்கை யொருத்தி தோழி யர் சூழ இருந்து வீணை வாசிப்பவள் ஞானசம்பந்தர் பாடிய அருட் பாடலைப் பாடிக் கொண்டிருந்த திறத்தை,

"செந்தமிழாற் சிந்தை தெளி சம்பந்தன்
முந்த உரைத்த முது மறையைச் — சந்தமுடன்

பாடலுமே பாரில் பரந்த வுயிர் வர்க்க மெலாம்
நாடியந்த ஓசை நயத்தினுல் — கூடி
இருக்கும் பொழுதில்''

தெரிவை யொருத்தி வேதியரொடு சொல்லாடுகையில் அவர் திருவெம்பாவையை ஓதுக என்ருபாக, அவள் அவரையே அதனை ஓதிக் காட்டுக என்பதும், அவர்

''ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும்
சோதியை யாம் என்றலுமே தூமொழியாள் — வேதியரே
இந்தப் பதத்தின் பொருளை இயம்பி மற்றச்
சந்த இசைத் தமிழைச் சாற்றும் என'' க்

கேட்பதும், அவ்வேதியனுர்,

நீதி உலகில் நிறுத்த நிகரில்லா
வேதம் உரைத்த ஒரு வேதியன் தான் — கோதிலா
மாணிக்க வாசகனே என்று மறை யோனுணர்த்தி
ஆணித் தமிழின் அரும் பொருளைப் — பூணி லகும்
அன்னமே சொல்ல எளிதல்ல; ஆயினும் கேள்;
மன்னும் அவனருளால் வந்த வகை — உன்னியதை
ஓதுவேன் இல்வுலகில் ஓர் மொழிக் கெல்லாம் நல்
எதுவிஞல் தோன்றி இலதாகும் — போதருறை
உளநின்றே காண ஒளிரும் உலகில்
நிறைவின்றியே குறைந்து நிற்கும் — முறைமையினுல்
ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதி யென்றே எங்கோனைச் சொன்னது, காண்

என்பதும் பிறவும் யாவரும் கருத்தூன்றி உணர்ந்து இன்புறத் தகுவனவாம்.

இந்நூலின்கண் திருக்குறள், ஞானசம்பந்தர் அருளிய திருப்பாசுரம், திருநாவுக்கரசரது திருவிருத்தம் முதலியவற்றின்

சொற்களும் சொற்றொடர்களும் கருத்துக்களும் ஆங்காங்கு மணி போல் கிடந்து இனிய ஒளி செய்கின்றன.

இந்த அரிய உலா நூலை அச்சிட்டுத் தமிழ் உலகுக்கு அளிக்கும் செப்பறை மடாதிபதி தவத்திரு. அழகிய கூத்த தேசிகர் அவர்கட்கும் அவர்தம் குறிப்பின்வழி நின்று இதனைச் செம்மை செய்து உதவிய திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கட்கும் தமிழரும் சைவரும் பெரிதும் நன்றி செலுத்தும் கடமையுடையராவர். அவர்களுடைய இச்சீரிய திருப்பணி செவ்வே நடைபெறுமாறு அங்கயற்கண்ணியோடமர்ந்த ஆலவாய் அண்ணல் தன் தண்ணிய பேரருளை நல்குவானாக என அவன் திருவடிகளை வழுத்துகின்றேன்.

> "ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
> ஆலவாயில் உறையும் எம் ஆதியே."

மதுரை
விளம்பி
வைகாசி க.

ஔவை துரைசாமி.

# பொருளடக்கம்.







செப்பறை, திருப்பெருந்திரு பொன்னம்பல தேசிகர் அவர்கள்
மடாலயத்தில் 14-வது பட்டம்
திருப்பெருந்திரு அழகியகூத்தத் தேசிகர் அவர்கள்

திருச்சிற்றம்பலம்

# செப்பறை உலா.

## காப்பு

சீர்பொருந்துஞ் செப்பறைவாழ் செல்வன் அடியிணையில்
தார்பொருந்தும் ஓர்உலாச் சாற்றவே — நீர்பொருந்தும்
போதங்கம் ஆனஉருப் பூவைவடி வாள்பயந்த
மாதங்கம் தன்னைநினை வாம். (க)

தூசொலிப்போன் என்றறிந்தும் தூயஉவர் கண்டுசிவன்
நேசனென்றே எண்ணும்வஞ்சி நீதனைப்போல் — ஆசிலா
முத்தர்கள்இந் நூலை முனியார் முனிவில்லா
அத்தனருட் சீரைவைத்த லால். (உ)

## நூல்

பூமா துறைமருமப் புத்தேளும் பூங்கமலக்
கோமானும் தங்கள்மனக் கொள்கையினல் — தாமாக
மண்இடந்தும் விண்படர்ந்தும் மன்னும் அடிமுடியும்
எண்ணி அறியா இயல்பினன் — பெண்ணரசாய்
வந்த பரவை மனையில் இரவிருகாற்
சந்த இசைத்தமிழோன் தானெனவே — முந்த
நடந்தபிரான் நான்மறையும் நாடிஇன்னம் தேடித்
தொடர்ந்தறிய ஒண்ணாத சோதி — படர்ந்த
சடையுடையான் கோவர்த் தனகிரியைத் தாங்கும்
விடையுடையான் மேருமலை வீரன் — படையதனல்
தந்தைபதம் சேதித்த தண்டியைத்தன் போல்அமரர்
வந்து வணங்க வரமளித்தோன் — சிந்தைதெளி

வில்லாத தக்கன் இகல்வேள் வியைச்செற்ற
நல்லான் கருணை நடராசன் — கல்லாதார்
காட்சிக் கரியான் கனல்விழியாற் காமனுடல்
மாட்சி அழித்தருள்செய் மாமறையோன் — ஆக்கிஅருள்
பூண்ட வழுதி பொருவரிய அன்பினால்
வேண்ட வளர்ந்தருள்செய் வேய்முத்தன் — நீண்ட
பொதிய வரைமுனிவன் போற்றமணக் கோலக்
கதியதனைக் காட்டியமுக் கண்ணன் — மதியனைய
வண்ண முகத்து மடவார் உடைகுலையக்
கண்ணில் மணம்புணர்ந்த கங்காளன் — தண்ணாரும்
செங்கையிரு கொங்கையினாற் சேர்த்து வடிவுடைய
மங்கை குழைத்த மணவாளன் — துங்கமிகும்
ஆயன் குடரி மலர்சாத்த அருட்குருதி
பாய வெளியாம் பரப்பிரமம் — மேயவெனச்
செம்பினாற் செய்த திருமன்றத் தாடும்அருள்
எம்பிரான் எங்கும் இருந்தபிரான் — உம்பர்தொழு
நெல்வேலி வாழ்வோன் நினைவோர்க் கருளென்னும்
நல்வேலி இட்ட நதிச்சடையன் — தொல்சீர்
உலகில்வினை எம்மை ஒழியக் குளிர்ந்த
அலகில் அறநிழலொன் றாக — இலகு
திருவுளத்தில் எண்ணிநின்ற சீர்மாறன் என்ற
கருணைபெற்று வாழரசங் கன்றைத் — தரணிதிரு
மேவவைத்துச் சோழன் வியந்தளித்த பாண்டிமா
தேவிஎன்னும் நீர்வார்த்துச் செங்கோலின் — பாவுரிமை
மன்னுங் குலச்சிறையாம் வாய்ந்ததிரு வேலியிட்டுத்
தன்னிகரில் லாக்கருணைச் சம்பந்தன் — என்னுமொரு
வல்லாள னாலே மறைவிளங் கும்பொருளைக்
கல்லா அருகக் களைபிடுங்கி — நல்ல
வலன்கைக் கொழுகம்பால் அவ்வரசின் கூனும்

மலஞ்செறிநோய் மாற்றிப் பணிக்காங் — தலம்போல
ஒங்கி வளர்ந்தே ஒழிவில்மறை நீதியென்னும்
தாங்குபணை மூவுலகும் தான்நிறைக்கும் — பாங்கருள்சேர்
சைவ சமயமெனுந் தண்ணார் தழைதழைத்துப்
பொய்வகையில் லாதீற்றுப் பூமலர்ந்து — மெய்வாழ்
சரியைகிரி யாயோகத் தன்மைகளே காய்த்துப்
பரவுசிவ ஞானம் பழுத்து — விரவுபுகழ்
பூதலத்துள் ளோர்கள் போற்றியுள்ள இன்றளவும்
ஆதரவா நல்கும் அருளரசு — வேதம்
பொருந்தியின்னம் காணாத புண்ணியத்தைத் தூது
வருந்தநடப் பித்த மறையோன் — விரிந்த
திருத்தொண்டர் பாட்டிற் சிறப்பித்த ஞான
உருத்தொண்ட ருக்குரிமை யுள்ளோன் — பெருத்தபுகழ்
நின்றசீர் மாறன் நிலையாப் பிறவிவினை
வென்றசீர் மாறன் விறல்வேந்தன் — துன்றுபுகழ்
மாமதுரைச் சொக்கருக்கு மன்னுந் திருப்பணிகள்
ஏமகிரி போல இயற்றியே — காமனைவெல்
கண்ணனைப் போற்றக் கயற்கண்ணி பாகன்அருள்
பண்ணமல் நெல்லைப் பதிமேவி — எண்ணரும்
செம்பொற் றிருப்பணிகள் செய்வாய்அங் கேயுனக்கு
நம்புமருள் நல்குவோம் நாமென்னக் — கம்பைநிலை
நெல்லைப் பதிதேவி நீங்காமூ லட்டானத்
தொல்லைப் பொருளைத் தொழுதிறைஞ்சி — நெல்லைத்
திருப்பதிஎல் லாங்கருணைச் செல்வன்உரு வாயங்
கிருக்கவெண் ணுதென்றுமனத் தெண்ணிப் — பெருக்கும்
பொருநைநதித் தென்கரையிற் பூத்தபுகழ் மூன்றீ
சுரமுடையார் நற்பதியை உன்னி — விரகினொடும்
அந்தப்பதியை அடைந்தே அருளினொடும்
சிந்தைக் கரியானைச் சேவித்து — விந்தை
சிறந்த படைவீடும் செய்துதிரு மன்னன்

உறைந்திருக்கும் நாளில் ஒருநாள் — கறந்தபால்
ஏந்தி இடையன் வரும்போதில் எங்கோமான்
வாய்ந்திருக்கும் நல்ல வரையிடத்துப் — போந்திடலும்
அங்கண்ஒரு கட்டைதட்டி ஆன்பால் கவிழ்ந்திடலும்
பொங்கும்அந்தக் கட்டைவலி போக்கவே — துங்கக்
குடாரியினால் வெட்டக் குருதியாக் கண்டான்
இடருழந்தான் ஏதோஎன் றேங்கிப் — படரு
மனத்திடையன் ஓடியருள் மன்னவன்முன் வந்து
கனக்குரிசி லேஅடியேன் காலைச் — சினக்க
இடருமொரு கட்டைபால் எல்லாம்போம் இன்றும்
அடரஅடி யேன்வினையால் அந்தோ — படருமந்தக்
கட்டைதன்னை வெட்டினேன் கண்டேன் குருதிவெள்ளம்
மட்டவிழ்தா ராய்இங்கு வந்தேனென் — றிட்டமாய்ச்
சொன்னவுடனே துணுக்குற் றெழுந்துபயந்
தென்னவனை யோஎன்றிரங்கியே — துன்னுபுகழ்
நெல்லைப் பதிகுறுகி நின்றசீர் மாறன்அந்த
எல்லைதனைக் கண்டானங் கேங்கினான் — நல்ல
குருதிவெள்ளத் துள்ளே குணக்குன்றைக் கண்டான்
அருவிபோற் கண்முத் தரும்ப — வெருவ
விழுந்தான் பதைபதைத்தான் விம்மினான் நாதக்
கொழுந்தாய் எழுந்தகுணக் குன்றே! — தொழுந்தகைமை
இல்லாதேன் காண இருங்குருதி தோய்ந்திருந்தாய்
நல்லாய் இதுகாண நாணுவேன் — ஒல்லையிந்தச்
செங்குருதி மாற்றியருள் செய்வாய் அலதெளியேன்
மங்குவேன் என்றுரைத்து மாமன்னன் — துங்க
உடைவாள் உருவவுமை யோடுங் குருதி
வடிவாள் கணவனக்கு மாற்றப் — படிபுரப்போன்
நின்றான்கூத் தாடினான் நின்றசீர் மாறன்நான்
என்றான் இரங்கினான் ஏழையேன் — பொன்றுமிந்தக்
கண்ணினாற் காணுங் கழைமுத்தே காயாம்பூ

வண்ணனடி காணாத மாமணியே — பெண்ணாளும்
பாகனே நாயடியேன் பண்ணும் பணிவிடைக்கிவ்
கேகனென் றன்னியனா யேயிருந்தால் — ஆகுமோ
செய்யுந் திருப்பணிகள் தீர்க்கம் பெறக்கருணை
அய்யனே சற்றருள் செய்யென — மெய்யன்பின்
வேண்ட வளர்ந்தான் விமலன் விறல்வழுதி
பூண்ட திருப்பணிகள் போற்றியே — மீண்டும்
படைவீ டடைந்தனன் பைங்கழையின் முத்தை
இடையறா தேதெரிசித் தென்றும் — முடையுடலின்
கூலிகொடுப் பானென்று கொண்டுமனத் தின்வெற்றி
வேலினான் நாடோறும் மேவலுமே — சாலநாள்
போகவொரு நாள்பொருனை பொங்கிப் பெருகநெல்லை
ஏகனைக்கா ணாதருந்தேன் என்றிருக்கப் — போகப்
பகற்பொழுதும் ராப்பொழுதும் பாண்டியன்கண் துஞ்ச
மிகக்கருணை செய்யவே வேண்டி — உகக்கும்
கனவின்கண் வேய்முத்தன் கன்னியொடும் தோன்ற
மனமகிழ்ந்து வேந்தன்எதிர் வாழ்த்தச் சினவிடையான்
நின்றசீர் மாறனே! நின்னைப்போல் ஆரன்பர்
நன்றுநீ செய்ததிறை நாமகிழ்ந்தோம் — என்றுநம்மைப்
போற்றுதற்கு நெல்லைஎன்னும் பொற்பதிக்கு நேராகத்
தோற்றுமந்தச் செப்பறையாந் தூயதலம் — ஆற்றலுடை
மன்னனே உன்நகரின் மன்னும் பெருமைதனை
இன்னம் விரித்தே இயம்பக்கேள் — "முன்னாள்
அரிநமது துய்ய அழகுநடம் காண
உரியதவம் செய்ய ஒருநாள் — அரிவையொடும்
சென்றவனை நோக்கித் திருமாலே செப்பக்கேள்
மன்றல் செறிபொருனை மாகரையில் — நின்ற
நிலையே பலத்தை நிகழ்த்துமென எண்ணிச்
சிலமுனிவர் வல்லதவம் செய்தார் — இலகும்
அவர்தம் மனையார்கற் பன்றியொரு தெய்வம்

பவமகற்று தென்று பகர்ந்தார் — புவியிலந்த
மங்கையரை நாமழிப்போம் மன்னும் அவர்கணவர்
தங்கள் தவமிழக்கச் சாரக்குப் — பொங்கும்
எழில்நடனம் காட்டுவோம் என்னவே மாயன்
அழகுதரும் மோகினியாய் அங்கே — பழகுந்
தவருளத்தை வென்றான்அத் தன்மைமட மாதர்
அவருளத்தை வென்றும்நாம் அன்று — பவமகல
இன்பாய் அரிதனக்கே எண்ணில் எழில்நடனம்
அன்பாய் அளித்ததலம் அத்தலங்காண்'' — அன்பாகேள்
''பொன்மன்றும் வெள்ளிப் பொருப்பின்மன்றும் செம்பினிற்செய்
மன்மன்றிம் மூன்று மணிமன்றும் — நன்மன்று
நீங்காமல் நின்று நிருத்தஞ்செய் வோம்அவற்றுள்
பாங்கான நெல்லைப் பதிமன்றம் — ஒங்குபுகழ்
செப்புமன்றம் அந்தத் திருமன் றுடையோம்நாம்
இப்பதியில் ஆகும் இயல்பினால் — செப்பறையாம்
இந்தப் பதியில் எமைஇருத்தி எப்பொழுதும்
வந்திப்பாய் நெல்வேலி வந்திறைஞ்சும் — அந்தப்
பலமருள்வோம் என்று பகர்ந்து மறைய
இலகுபுகழ் வேந்தன் எழுந்தே — அலகில்புகழ்த்
தந்தையே பொல்லாத் தமியேன் தனைவிரும்பி
வந்தனையோ அந்தோ மலரடிகள் நொந்தனவோ
என்றென் றிரங்கி இருந்தான் விடிந்தளவில்
நின்றசீர் வென்றநெடுமாறன் — துன்றுபுகழ்ச்
செப்பறையை மேவியருட் சிந்தைக் கரியவொரு
மெய்ப்பொருள்கூத் தாடும் வியன்தலத்தில்'' — ஒப்பிலான்
தாழ்ந்தரன் எழுந்தான் அழைத்தான் அருங்கருணை
வீழ்ந்தாறு போல விழிசொரிய — ஆழ்ந்தான்எண்
திக்கெலாம் போற்று நெல்லைத் தீங்கரும்பைச்செப்பறையில்
வைக்கவே நாடி மனமகிழ்ந்து — மிக்க
திருக்கோயில் எல்லாம் சிறக்கவே செய்தான்

இருக்கோவிட் டெய்தா இறைவன் — பெருக்குநல்ல
ஆகமங்கள் சொன்ன அடைவிலே நெல்வேலி
ஏகனை அங் கேயமைத்தான் எங்கோமான் — மோக
அரிக்கருளும் நல்ல அழகுநட ராசன்
திருக்கருணை மேனி திறனுச்செய் உருக்கொள்ளச்
சிற்பநூல் வல்ல திறத்தோர் தமைவினவ
அற்புதனைச் செய்யஅரி தாமென்றார் — நற்கோவும்
இந்த வடிவை எவர்செய்வார் என்றிரங்கிச்
சிந்தை தளரத் திருவருளால் — எந்தைஉறை
தில்லைநகர் வீற்றிருக்குந் தெய்வத் திருச்சிற்ப
வல்லமையோன் வந்து மருவலுமே — நெல்லை
வழுதி மனமகிழ்ந்து வந்தவனை நோக்கி
எழுதரியோன் தன்னை இயற்றாய் — முழுதும்
தருவேன் எனத்தச்சன் தாழ்சடையோன் தன்னை
அருமைபெற வேசெய் தமைக்க — உருகமனம்
கண்குளிரக் கண்டான் கரையிலா ஆனந்தத்
தண்குளிர்நீர் ஆடித் தனிநின்றான் — மண்புகழுங்
கண்ணாளன் தன்மனத்திற் காமித்த தெல்லாம்நற்
றண்ணார் அருளினொடும் தானளித்தான் — மண்ணாளும்
நின்றசீர் மாறன் நிகரிலருட் செப்பறைவாழ்
துன்றுபுக ழோனைத் தொழுதிறைஞ்சி — ஒன்றறியா
நாயேனை ஆட்கொண்ட நாயகனே நல்லதிரு
வேயே இடமான வித்தகனே — மாயோனை
ஆட்கொண் டழகுநடங் காட்டும் அம்மானே!
வாட்கொண்ட கண்ணி மணவாளா — நாட்கொண்ட
செங்கமலத் தாளா திருவளருஞ் செப்பறையாய்
எங்கமல நெஞ்சுள் இருப்போனே — கங்கையணி
வேந்தனே என்று வினவ வினையகற்றி
வாய்ந்த கருணையருள் மாணிக்கம் — சேர்ந்தவருட்
போதம் உடைய புலிஅரவம் கண்டுதொழக்

காதல் அழகியமான் கண்களிப்ப — ஏதம்
கடந்ததிருத் தொண்டர்குழாம் கண்பனிநீர் வார்ப்பப்
படர்ந்த சடைமின்னைப் பார்ப்பத் — தொடர்ந்துகொண்டு
பாடும் அடியார் பதுமமலர் உள்ளத்தே
ஆடும் திருச்சுந் தரக்கூத்தன் — தேடும்
பொருளும்நமக், கீதென்னப், போற்றுமன் பர்க்கின்பம்
அருளும் அழகிய கூத்தன் — தெருளும்
அருளும் பிணிந்த மனப்பொதுவில் ஆடி
அருளும்எழில் நடன அய்யன் — கருணைவிழா
ஆக்கி அருளென் றரியாதி தேவர்குழாம்
ஊக்கமிகு மண்ணுலகில் உள்ளோரும் பாக்கியஞ்செய்
நல்லதிருச் செப்பறைவாழ் நாதா எனவேண்ட
வெல்லும் அருட்கா ரணம்விதித்த — சொல்லின்
படிதனுசு மாதநிறை பக்கத்து வானோர்
அடிவணங்கு நற்சதயத் தன்பாய்க் — கொடிபுணர்வீ
சால மணிவீதி வேள்விமடம் சத்திர
சாலை விமானம் தமனியத்தாற் — கோலம்
புனைவித்து நல்ல குளிர்ப்பந்தர் இட்டு
தனைஒப்பி லான்கருணை தங்கும் — புனிதநிறை
வேதியராற் செங்கண் விடைக்கொடியேற் றிக்கருணை
சோதிதிரு அஞ்செழுத்தும் தூநீறும் — மேதினிகள்
எங்கும் தழைக்க வுயிர்க்கேதங் கெடக்கருணை
பொங்கும்விழா ஏழும் பொலிந்தருளிர் — துங்கநிறை
எட்டாம் விழாவிலுல கெல்லாம் நிறைந்துமதில்
தட்டாமல் நின்ற சதிருடையோன் — வட்டமிலா
நான்முகனும் காண்பரிதாய் நண்ணும் இடத்தடியின்
வானமதிமேல் வால மதிவந்த — மேன்மை
பயந்த வயிரத்தாற் பணிவெண் நிலவு
தயங்குதிருக் கோரம்பம் சாத்தி — உயர்ந்தவிசை

வல்லவர்கள் என்றும் மருவும் படைவீட்டில்
எல்உமிழும் முத்தின் இனிதமைந்த — நல்லஇரு
சக்கரவா ளக்கிரியுள் தங்குமிரு பாற்கடல்போல்
மிக்கதிருத் தோடணிந்து வேளைவென்ற — உக்கிரம
நெற்றிவிழி யிற்சடைவெண் நீர்த்திவலை தான்தெறிப்ப
சற்றே புகைஎழுந்த தன்மைபோல் — முற்றாத
திங்கள் அனைய திருவார் நுதலில் எழில்
பொங்குதிருச் சாந்துப் பொட்டணிந்தே — துங்கமிகும்
மாலயனும் யக்கருத்து மன்னும் இடத்துதய
காலைதனில் நீலக் கடலெழுந்த — வால
அருக்கன் அனைய அருணமணி யாற்செய்
திருத்திகழும் கண்டசரி சேர்த்தே — ஒருத்திவிழி
அம்புதைத்த தானத்தில் அம்பொன் வரையினின்
றும்பர்நதி காணுநதி ஒன்றியே — இம்பர்
ஒழுகுவது போல ஒளிமுத்த மாலை
அழகினக்க மாலை அணிந்தே — பொழியுமருட்
காந்திமதி அங்கையினாற் கட்டக் குழைந்துதிரு
வாய்ந்த இடத்திலந்த மாதுமையாள் — சேர்ந்தே
இமய வரையிருந் தாற்போலப் பச்சை
அமையுங்கே யூரம் அணிந்தே — நமையாள்
பிரமன் படைக்கஒலி பேசும் இடத்தும்
திரமன் அழிக்கஎரி சிந்தும் — பொருவில்
இடத்தும் அழிவில்முத்தி ஈதென்று காட்டும்
இடத்தும் அபய இடத்தும் — விடற்கரிய
செம்பொன் மணிக்கடகம் சேர்த்தருளிச் செய்தவமே
உம்பர் தருமென் உணர்வுடையோர் — வெம்பி
விடும்புலியைக் கொன்றவுரி மேவும் இடத்தே
நடுங்கவரும் வீரனது நற்பொன் — உடம்போனைச்
செற்றநர சிங்கத்தின் சென்னிதனைத் தீஅரவம்

உற்றஅரைச் சேர்த்த ஒருநாளில் — அத்தலைவாய்
தோய்ந்த உதிரம் கவிழ்ந்ததெனத் துன்னுகதிர்
காய்ந்தசந்த்ரக் காவிக் கலையசைத்தே — வேய்ந்தமால்
எண்ணற் கரிய இடத்துமெழில் ஆருயிர்கள்
நண்ணிப் பயன்கொள்ளும் நல்லிடத்தும் பெண்ணரசு
மன்னுங் கமலத் திருந்ததுபோல் மாமணிசேர்
பொன்னஞ் சிலம்பு புனைந்தருளி — மின்னார்
விரிசடையிற் கங்கைநீர் வீழவிட் டாற்போல்
அருமணிக ளாலே அமைத்து — மருவும்
திருவாசி சாத்தித் திசைமுகன்மால் சென்னிப்
பொருவில் அணிமாலை போல — மருவுயிர்க்கும்
வெண்தாம ரைமாலை சாத்தி விதமான
தண்தார் வகையும் தரித்தருளிக் — கண்டோர்கள்
உள்ளம் கவரும் ஒளிமுத்தின் பந்தர்மிசைக்
கள்ளவிழ்பூங் கூந்தலருட் கன்னியொடும் — தெள்ளுதமிழ்ச்
செப்பறைநல் வீதிதனில் தேவர்களும் மூவர்களும்
எப்பொருளும் ஆனேன் எழுந்தருளி — ஒப்பிலா
ஆனைமுகன் மூடிகத்தும் ஆசில் அருட்கந்தன்
கானஎழில் மஞ்ஞையினும் கஞ்சுகஞ்சேர் — ஞான
வடுகன் ஞமலியினும் வந்தருளச் சாத்தன்
அடல்வேழம் மீதில் அணைய — இடிஎனவே
கந்தமல ரோன்மத் தளமொத்தக் காயாம்பூச்
சுந்தரத்தோன் செம்பொன் துடியடிக்க — இந்திரனும்
அம்மையும் தாளம் அமைத்தொலிக்க வாணன்மிகச்
செம்மைக் குடிமுழாச் சேவிப்ப — வெம்மைதரும்
ஆழிநிறப் பானுகம்பன் ஆயிரம்வெண் சங்கமெடுத்
தூழிஇடி என்ன ஒலிஎழுப்ப — ஆழிசெறி
பூத கணங்கள் புறமேழும் சேவிப்ப
நாதத் தமிழ்முனிவன் நாரதனும் — பேதமிலாத்

தும்புருவும் எண்ணில் சுருதி இயக்கர்களும்
வம்புலவும் வீணைபல வாசிப்பச் — செம்பதும
மங்கை முதல்வர் மடவார்கள் மாற்கிளைய
தங்கைதிரு முன்கீர்த்தி சாற்றிவரத் — துங்கமிகும்
வானவர்பூ மாரி சொரிய மறைநான்கும்
ஊனமிலா ஞான உருத்திரரும் — மோன
முனிவர்களும் முன்நின்று முத்தனே போற்றி
புனித வடிவோனே போற்றி — பனிமதியம்
சூடும் பதிபோற்றி தொல்லைப் பொருள்போற்றி
பாடுமறைகள் எல்லாம் பயன்போற்றி — ஆடும்
அருள்உருவே போற்றி அருஉருவும் அல்லாப்
பொருள்உருவே போற்றிஎன்றும் போற்றி — தெருளார்
திருநந்தி கைப்பிரம்பும் சீர்வாளும் ஏந்திப்
பெருகும் புகழரசு பேச — உருகுமருட்
சம்பந்தர் அப்பர் தமிழ்ச்சுந் தரர்கருணைக்
கம்பஞ்செய் வாதவூ ரன்கருவூர் — நம்பன்
முதலாம் தமிழ்ப்புலவர் முனநின்று போற்ற
இதமாம் இருடிகள்நின் றேத்த — விதமான
தில்லைவாழ் அந்தணர்கள் முன்னும் திருமறையோர்
எல்லையிலா வேதம் இசைத்துவர — நெல்லைவரு
நின்றசீர் மாறன்முதல் நீதிஅர சர்குலத்
தொன்றுமருட் டொண்டர்பதம் உன்னிவர — என்றுமன்பர்க்
கில்லைஎன்ஞு தேற்பகைமுன் என்றும் வணிகர்குலத்
தொல்லை மருத்தொண்டர் துதித்துவர — வெல்லுமிளை
யான்றன் குடிமாறன் ஆதிவே ளாளர்குலத்
தேன்றசீர்த் தொண்டர் இயைந்துவரத் — தோன்றுமருட்
கண்ணப்ப னேமுதலாம் தொண்டர்களி கூர்ந்துதங்கண்
உண்ணெக் குருகி உவந்துவர — வண்ணமழுத்
தாங்குங் கருணையுருத் தண்டி புறங்காக்க
ஓங்குபுகழ்ச் செப்பறைவாழ் வோன்வந்தான் — தாங்குகரக்

குன்றுரித்தோன் வந்தான் கொடுங்காளி வெட்கமுற
அன்றுநடம் ஆடி அகிலமெல்லாம் — என்றும்
உலகா யுதமாய்ப் போகாமல் ஓங்கும்
மலகா மியம்ஒழிந்தோன் வந்தான் — நிலையான
ஞானம் குழவியெனும் நல்லகதி ராற்புத்தர்
ஈன ஒழுக்கம் எனுமிருளைத் — தானமற
ஓட்டி உலகுக் கொருவன்என வேதனை
நாட்டுங் கருணை நடன்வந்தான் — ஈட்டும்
சடமான கன்மங்கள் தாம்பிரமம்ஆகும் — திடமான
கர்த்தா இலையென்ற கன்ம இருடிகளை
மெய்த்தாரு காவனத்தில் வென்றருளி — இத்தலங்கள்
உய்யத் திருக்கருணை ஓங்கவந் தோன்வந்தான்
வய்யமுண்டோன் வாச மலரோனும் — பொய்யின்
அகம்பிரமம் என்ன அவர்மதங்கள் தீர
மிகுந்தழலாய் மேனிகொண்டு மேவி — இகம்பரமுன்
தேட அவர்கள் திகைத்தமனத் துக்கரந்தான்
நீடி இருந்தவர்கள் நின்றேத்த — நாடியவர்
காண எழுந்தருளிக் கர்த்தர்நாம் என்றவர்கள்
ஆணவநோய் தீர்த்திவ் அகிலமெல்லாம் — பூணும்
அடிமைநமக் காமென் றருள்புரிந்தோன் வந்தான்
கடிமலர்ப்பூங் கண்ணனே கர்த்தா — படியில்
அவனடியைப் போற்ற அருள்புரிவான் என்றே
பவமுடைய தக்கன் பரிவாய் — நவமாக
வேள்விசெய அன்று விறல்வீர னுலந்த
வேள்வி தகர்பித்த வெற்பனன்றி — வேள்விப்
பலன்தருவார் இல்லையென்ற பங்கயப்பூஞ் செவ்வாய்
மலர்ந்த கருணையோன் வந்தான் — கலந்தவருள்
நண்ணுங் கருணைநடன் வந்தான்வந் தானென்
றெண்ணில்திருச் சின்னம் எடுத்தியம்பத் — தண்ணாரும்
பாலாழி வந்ததெனப் பாவை யிடப்பாகன்

மேலாழி போலும் மிகுமன்பாம் — மாலாகிக்
கண்முத் தரும்பக் கரையில்லா ஆனந்த
உண்முத் தரும்பி உருகிவர — வெண்முத்தம்
ஏந்தும் இளமுலையார் எனசொலார் மேலிரதி
காந்தன்மலர் வாளி கடிதேவ — வாய்ந்த
திருமால் உலகத்துச் சேயிழையார் வேதப்
பெருமான் உலகத்துப் பெண்கள் — அருகான
தெய்வ உலகில் திருமடவார் சித்திரமார்
மைம்முகில்சேர் கோபுரத்தும் மன்றிடத்தும் — செய்ததிருக்
குன்றிடத்தும் வேறிடத்தும் கோலமணி மேடையிலும்
ஒன்றியொன்றி நின்றுமயல் உற்றிடுவார் — மன்றல்செறி
பூமேல் உறையுமடப் பூவையர்கள் எண்ணிலார்
கோமான் அழகுதனைக் கூறுவார் — காமனைக்கண்
டோடுவார் ஓடி ஒளிப்பார் பனைமடலைத்
தேடுவார் கையில்வளை தேடுவார் — பாடும்
இசைத்தொழிலைக் கைவிடுவார் எங்கெங்கும் அன்னை
வசைத்தொழிலுக் கஞ்சி வருவார் — பசத்தமுலை
முத்தம் சுடவாங்கி முன்றில் எறிவார்கள்
மத்தரைப்போல் நின்று மயங்குவார் — பித்தரே
மாதர் கலையையும் வாங்கினீர் முன்னமெங்கள்
போதமயம் வாங்கஇன்று போந்தீரோ — தீதாரும்
தக்கன்தன் வேள்விதனில் சந்திரனைத் தேய்த்திரின்
றிக்கலையைக் கொன்றால் இழுக்குண்டோ — நக்கனெனச்
செப்பும்அடி யார்கவலை தீர்ப்பரென எங்கள்மன
வெப்பம்ஒளி யாதிருந்த வெற்றியெனோ — மைப்பயிலும்
கந்தரத்தன் என்று கழறுவார் சூரனைவெல்
கந்தரத்தன் சுந்தரத்தைக் காமிப்பார் — அந்தனிப்பொற்
பாதனே சற்றுமுகம் பாருமென் பாரிவர்விற்
கோதையர்கள் தங்கள் குழாத்தொருத்தி — பேதை.

விரகமதன் கைச்சிலைக்கு வேண்டிமிகும் அன்பாற்
கருதி வளர்க்குமிளங் கன்னல் — பொருவரிய
பொன்உலகின் அன்றியிந்தப் பூதலஞ்செய் மாதவத்தாற்
கன்னிஎன வந்தஇளங் கற்பகக்கா — உன்னரிய
கண்ணுதலைக் கண்டு கருணைவிழி நீர்சொரிய
உண்ணெகிழ்ந்து நின்றாடும் உத்தமரைத் — தண்ணருள்சேர்
நன்மையிலார் கண்டு நகைக்கும் அதுபோலக்
கன்னல் மதனன் கணவரொடு — மின்அனையார்
கூடி விளையாடு கொள்கையினைக் கண்டுநகைத்
தாடியிது என்ன அறையுமென்பாள் — நாடரியோன்
உள்ளம் சிறந்தோர்க் குரைத்ததிரு ஆகமம்போல்
கள்ளம் பிறவாத கண்ணினாள் — தெள்ளுதமிழ்ச்
செப்பறைவாழ் ஆனந்தத் தேனைக்கண் டுள்ளுருகி
மெய்ப்புளகம் ஆகி விதிர்விதிர்த் — தொப்பில்விழி
முத்தம் சொரிந்தாகு முத்தா மொழிபோலும்
வைத்தகரும் பொத்த வசனத்தாள் — சுத்தனையின்
றாயும் தகைமையிலார் அவ்வினைக்கீ டாய்ப்புசிப்ப
தேயும் சிறிய எயிற்றினாள் — தூயஉமை
பங்கன் சரிதைசெப்வோர் பத்திதரும் உள்ளத்தே
தங்கும்அருள் போலும் தனத்தினாள் — எங்குநிறை
தேசிகனை அன்றித் திருஞான நூலுணர்வோர்
கூசுதிறன் போலுங் குழலினாள் — வாசந்தி
பெய்யுஞ் சடிலனருள் பேசா வருசமயம்
செய்யும் செயல்போலும் செய்கையாள் — துய்யதிரு
நீலநிறப் பட்டுடுத்தி நித்திலப்பூ மாலைமுதற்
கோலப் பணிபலவும் கொண்டணிந்து — சால
மணலாற் சிறுசோறும் வாசமலர்ப் பன்னீர்
இலையாற் கறியும் இயற்றி — உணவாரும்
என்றுதன் அன்னைமுந்தி ஏர்த்து முகம்பார்த்து
நின்றுவிளை யாடுங்கால் நேயமிலார் — ஒன்ற

அரியபிரான் செப்பறைவாழ் அய்யனன்பர்க் கென்றும்
உரியபிரான் நற்கருணை ஒக்கல் — திருவளரும்
வீதி உலாவுதலும் வெள்வளையார் வந்துதொழக்
காதலவ ரோடுவந்து கைதொழுதாள் — பாதி
மதியணிந்த செஞ்சடையும் மன்னுதில தம்போற்
மதியும் நுதல்விழியும் பாங்கார் — மதிநுதலி
தன்னையே பார்த்தவிழித் தாமரையும் சற்றிரங்கா
என்னைமால் செய்யும் இளநகையும் — பொன்உலகைக்
காக்கக் கறுத்தமணிக் கந்தர முங்கரத்தின்
வீக்கியதோர் சூகரத்தின் வெள்ளெயிறும் — நோக்கரிய
எண்ணிலா ஆதித்தர் என்னும் திருவடியும்
தண்ணுலா வுந்தரளத் தாழ்வடமும் — கண்ணினல்
கண்ட வுடனே கவலைஎல்லாம் தீர்க்குமது
வண்டலர்ந்த கொன்றை மலர்த்தோளும் — முண்டகத்தை
ஒத்த அபய கரமும் ஒளிகொளவே
வைத்த கரமும் வரிஅரவும் — நித்தன்
புலித்தோல் உடையழகும் பூட்டரவக் கச்சும்
வலிச்சிய மால்சிரமும் மன்னும் — ஒலிக்கடல்போல்
மாலறியாச் செந்தா மரையடியும் மாலொழிய
மேலெடுத்த செஞ்சிலம்பார் மெய்ப்பதமும் — கோலம்சேர்
வட்டத் திருவாசி மன்னும் திருவழகும்
துட்ட முயலகனும் சுந்தரஞ்சேர் — பட்டம்
தரிக்கும் அழகியபூந் தையல் இடமும்
விரிக்கும் மணிப்பந்தர் வீதி — எரிக்கரியான்
தன்னிடத்தில் கண்டாள்அத் தையலார் தம்முகம்பார்த்
தன்னை அனை யீர்இவர்தாம் ஆர்என்னப் — பொன்னேமுன்
கொஞ்சும் வடிவுடைய கோதைகை யிஞற்குழைந்து
நெஞ்சுருகி நின்றநெல்லை நேயன்காண் — வஞ்சியரைக்
கற்பழித்துக் காசினியிற் கர்த்தனுன் என்றுநின்ற

நற்புகழ்சேர் கங்காள நாதன்காண் — பொற்பார்
மணப்படைவீட் டிற்குரிய மன்னன் மனத்தை
இணக்கும் எழில்நடன ஏகன் — பிணக்கமிலா
அன்பருளத் தாரும் அழகுநட ராசன்காண்
துன்பமிலாச் செப்பறைவாழ் சோதிகாண் — இன்பமருள்
கண்முத்தன் காணென்று காரிகைபார் சொல்லலுமே
கண்முத் துதிர்த்துக் கனிமொழியாள் — தண்முத்த
நன்னகையீர் பாரீரிந் நங்கையரெல் லாமிருக்க
என்னைமுகம் பார்த்தே எடுத்ததிருத் — தன்னடிக்கீழ்
வந்திருக்க வாவென்று மாமலர்க்கை காட்டியந்தச்
சிந்துரச்செவ் வாயான் சிரித்தழைத்தான் — கந்தமலர்
அங்கையீர் என்னை அவனடிக்கீழ் வைக்கவென
மங்கையர்கள் தாம்நகைத்து மாதேகேள் — பங்கமிகு
நம்மால் அவனடிக்கீழ் நண்ணல்எளி தோகருணைப்
பெம்மான் தனைநினைந்து பேதமறச் — சும்மா
இருந்தவற்கும் அல்லால் இமயமயில் பங்கன்
பொருந்து கயிலைக்குப் போக வருந்தித்
தலையால் நடந்தஅருட் டையலைக்கண் டையன்
மலர்வாயால் அம்மாவா வென்னத் — தொலையாத
அப்பனே என்றவளைப் பார்த்தையன் வேண்டியதென்
செப்புவாய் என்னத் திருக்கண்ணால் — அப்புதிர்த்து
வேண்டும் வரமாவ தித்தனையே வெள்ளைநீர்
ஈண்டும் சடையாய் இசைவையேல் — மீண்டும்
பிறவாமை வேண்டும் பிறப்புண்டேல் உன்னை
மறவாமை வேண்டும் வரமென் — றறமுரைக்கும்
காரைக்கால் அம்மைக்கும் அல்லாற் கழலடிக்கீழ்ச்
சேரல் எளிதல்ல தேனேஎன் — றீரமறச்
சொல்லுதலும் கண்பனிநீர் சோரத் துடித்தழுது
மெல்லியலார் தாம்பிடிக்க மீளாமல் — நில்லும்
வருவன் வருவனென மன்னவனும் கண்டங்

கருள்புரிந்தார் போல அகன்றான் — வருமதனும்
இந்த அழகால் எனக்கிளையாள் போன்றிருந்தாள்
அந்தோ எனவுளத்தில் அன்புற்றே — செந்தேன்
ததும்புமலர் வாளிதைக்கத் தையலிள மேனி
வெதும்புமிடர் செய்யாது விட்டான் — பெதும்பை
பொருமதனன் நாளைவில்லிற் பூட்டலாம் என்று
கருதி இருக்குங் கழுநீர்த் — தருணஉருக்
காளையர்கள் நெஞ்சைக் கலக்குங் கவடறிந்தும்
வேளைகண்டு செய்யும் விதமுடையாள் — பாளைவிரி
செப்பறையில் ஆடும் செழுந்தேனை உண்டுள்ள
வெப்ப மொழிந்தருளை மேவியே — எப்பொருளும்
அற்றாரைக் கண்டங் கவரைப்போல் ஆக்கவெண்ணிச்
சற்றே குறைந்த சதிருடையாள் — பற்றாய்
விரும்புவது போலவொரு வெள்ளன்னம் பெட்டை
பொருந்தி அணையும் பொழுதில் — திருமலி
கடைக்கண்ணாற் பார்த்ததனைக் காமித்து விள்ளா
அடக்கம் உடையமட அன்னம் — கடக்கும்
முனிவர்களும் காமிக்க மோகனஞ்செய் கிள்ளை
இனிய கருணையினால் எங்கோன் — முனிவனெனக்
கையினாற் பிட்ட கமட வயிறேபோற்
செய்ய அழகுதருஞ் சேவடியாள் — அய்யனருட்
பொன்னின் திருக்கரத்தாற் பொன்னின் விழிபறித்த
கன்னிவரால் அன்னகணைக் காலினாள் — என்நாதன்
உம்பர்தொழ முப்புரம்தீ ஊட்ட இனிதமைத்த
அம்பொன்மணித் தேரனைய அல்குலாள் — வெம்புகறைக்
கண்டன் கமலக் கரத்தில் அமைத்தவலி
மண்டுதுடி போலும் மணியிடையாள் — பண்டைமறை
சிந்தித்துக் கேட்டுத் தெளிந்தவர்கள் உள்ளத்தே
உந்துங் கருணை ஒளிபோல — எந்தைகரக்
கஞ்சத் திருக்குங் கருணையொலித் தாளம்போற்

பஞ்சுதருங் கோங்கரும்பின் பான்மைபோல் — வஞ்சியிடை
இற்றே விடுமென் றிரங்கியே இப்பொழுது
சற்றே எழுந்த தனத்தினுள் — சிற்பரமன்
தன்னைமுன்னம் ஈன்றபச்சைத் தாயேபோல் சந்தனத்தால்
துன்னும் அழகியபொற் றோளினுள் — கன்னல்மதன்
தன்னைவென் றோன் இன்பம், தழைக்கும் அருள்போல
மன்னுமொளி பூத்த மணிநகையாள் — உன்னரிய
சங்கரன்தன் வேடம் தரித்துமதில் தோய்வின்றித்
துங்கமிலாப் பொற்சமயம் தூய்மையெனத் — தங்கள்
மனத்துள் விரும்பி மகிழ்வார் திறம்போலும்
கனத்தகள வில்லாத கண்ணாள் — சினத்தோடும்
வந்தார் புரமெரித்த மன்னன் கரச்சிலைபோல்
சிந்தூரம் தீட்டுந் திருநுதலாள் — கந்தமலர்க்
கண்ணியர்க ளோடும் கமழ்பொருனை நீராடி
எண்ணில்விலைச் செம்பட் டினிதுடுத்துத் — தண்ணொளிசேர்
மாணிக்கம் முத்து வயிரம்வயி டூரியநற்
பூண்மொய்த்த மெய்யிற் புழுகணிந்தே — ஆணிப்பொன்
மேடைமிசை வந்துதிரு மெல்லியலா ரோடிருந்தே
ஆடைபுலித் தோலை அசைத்தபிரான் — பீடுடைய
செப்பறையும் பாண்டித் திருநாடும் செந்தமிழ்சேர்
மெய்ப்பொதிய நன்மலையும் மெஞ்ஞான — தற்பரமா
நல்கும் பொருனை நதியுநதி யோடுசடை
புல்கும் செழுங்கொன்றைப் பூந்தாரும் — வல்லவினை
நீக்க உயிர்கள்தொறும் நின்றதிரு ஆணையும்பொன்
பூக்குங் கரத்திற் பொலிதுடியும் — ஊக்கம்
உடையஇரண் டாயிரங்கோ டோங்கு கரியும்
விடையும் விடையார் கொடியும் — படைவிழியாள்
பாடிக் கழங்காடிப் பைந்தொடியார் தம்முடனே
கூடிவிளை யாடுங்காற் கோதையஞ்ச — நீடியதோர்
வெற்றி மதகரியை வேகத் துடனுரித்த

கொற்றவன்நல் முத்தின் குளிர்ப்பந்தர் — உற்றே
மிருங்கனக மேருவென வீதிவரக் கண்டே
மகிழ்ந்துதிரு மேடைவிட்டே வந்தங் — கிருந்து
தொழுதாற்மேற் சேவித்தாள் சுத்தனைக்கண் டன்பாய்
அழுவார் தமைக்கண் டழுதாள் — பழுதிலா
மங்கையரே இந்த மணிமுத்தின் பந்தர்மிசை
தங்குமிவர் ஆரென்னச் சாற்றுமெனச் — செங்கனிவாய்த்
தேனே உலகளிக்குஞ் செங்கண் முகுந்தனிவர்
ஞான எழில்நடனம் நாடியே — ஊனமில்லா
எண்ணில் தவஞ்செய்ய எங்கோமான் மங்கையுடன்
நண்ணிஅரி முன்வந்து நம்மையெண்ணு — எண்ணிலாக்
கன்னியர்தம் கற்பழிக்கப் போவோம் அவர்கணவர்
தம்மைத் தவமழித்துச் சாரங்கண் — மன்னும்
எழில்நடனம் காட்டுவோம் என்ன முகுந்தன்
வழுவிலெழில் மோகினியாய் மன்னப் — பழுதிலாத்
துங்கவேள் கோடியொன்றாய்த் தோற்றும் அழகென்னச்
சங்கரன்ஓர் கங்காள தாபதராய் அங்கவர்கள்
கற்பும் தவமும் அழித்தே கரியமால்
நற்கண் குளிர நதிபொருனைப் — பொற்புடைய
செப்பறையில் வாழுஞ் செழுந்தேன்காண் சிந்தித்தார்க்
கெப்பொழுதும் உள்ளம் இருப்பன்காண் — முப்புரத்தைச்
சற்றே சிரித்தெரித்த தாணுகாண் தன்மநூல்
கற்றோர்சூழ் நெல்லைக் கடவுள்காண் முற்றா
முலைமாதே என்று மொழியமட மாதர்
அலைமேவு செல்வியும் அங்கண் — துலைவில்புகழ்
மங்கையரே இங்கிவர்தாம் மார்பில் அணிந்ததிருச்
செங்கழுநீர் யான்வாங்கச் செல்வனென — நங்கையே
முற்செய்த மாதவத்தால் முன்னோன் பகர்ந்ததிரு
நற்சைவ சார நலனறிந்து — கற்றா
தனைமேய்த் ததன்பால் கறந்ததனை ஆட்டச்

சினமாக வந்தரனைச் சேரக் — கனமான
தங்கைமழு வாளினால் தந்தைபதம் சேதித்த
துங்க திருத்தண்டி தூயமுடியிற் — செங்கழுநீர்
தோய்வதலால் நம்மால் தொடலெளிதோ என்றுபச்சை
வேயனைய தோளிர் விளம்பலுமே — மாயவிழி
நீர்ததும்ப நின்மலனைப் பார்த்து நினைவுற்றும்
வார்ததும்பு மென்முலையார் வந்தெடுத்தார் — கார்ததும்பு
கண்டனும்அவ் வீதி கடந்தான் கலகமதன்
வண்டலர்பூ வாளி மறந்தானோ — தண்டருசீர்ச்
செங்கைக் கணைக்குவைத்த சிந்தனையோ செங்கமலக்
கொங்கைக்குப் பங்கம் கொடாதகன்றான் — மங்கை
வெருவுமதன் நெற்றி விழியினால் வெந்து
மருவு பழிஅரன்பால் வாங்க — மருவியே
நித்த மலர்சொரிந்து நேசமுடன் பூசித்தே
வைத்த குவளை மலர்வாளி — முத்தர்
பழகும் விரத்தமெனும் பாயிருளை ஓட்டி
அழகுவெயில் காட்டும் அருக்கன் — மழைமதஞ்சேர்
ஆடவர்கள் என்னுமத யானைகளைக் கொல்லவந்த
கோடுடைய வீரக் கொலையாளி — பீடுடைய
மங்கையரே தெய்வமென மண்ணுலகி லேசேர்த்தி
தங்கிவர வந்த சமயகுரு — திங்களணி
தேசிகனைக் கண்டோர்கள் தீரும் திரமுடைய
மாசுதரு கொஞ்சவினை வந்தாலும் — கூசியே
நெஞ்சில் துயரமுற்றும் நீங்குவது போல்இலவம்
பஞ்சினையும் கண்டஞ்சும் பாதத்தாள் — மஞ்சுதரு
கந்தரத்தோன் செப்பறைவாழ் கண்ணுதலைச்சேர்ந்த
பந்தனையோர் நெஞ்சிற் பரந்தெழுந்து — வந்த
கவலைபோ லேயகன்ற அல்குலாள் கங்கைத்
திவலைச் சடையினடி சேர்ந்து — பவவினைகள்
வெல்லும் அவரறிவின் நுட்பம்போ லேவிளங்கச்

சொல்ல அரிய துடியிடையாள் — நல்ல
சரியைகிரி யாயோகத் தன்மையில் நின்றங்
கரியவினை கன்தமை அறுத்துக் — கரியமலம்
தேய்த்தருளால் நேயத்தைச் சேர்ந்து வினைவலத்தால்
ஏத்தசெல்வம் கண்டங் கிறுமாந்து — வாய்த்த
மதியுடையோர் போற்பருவம் தோறும் வளர்ந்து
அதிகமுலைக் கச்சை அறுத்து — மதியிலிடை
தேய்த்துப் புளகத்தாற் செங்கைக் கடங்காமல்
வாய்த்துப் புவனமெல்லாம் மல்குபுகழ் — பூத்த
கனகமலை வெள்ளிக் கயிலாயம் விட்டுப்
பனகமணிச் செப்புப் பழித்தே — இணையிலையென்
றெண்ணி இறுமாந் திருக்குமிளங் கொங்கையாள்
வண்ண இழைபூண் மணிமிடற்றாள் — கண்ணுதலோன்
வாசிக்கும் வீணை அனைய வசனத்தாள்
நேசிக்கும் அன்பர்கண் நின்றபிரான் — மோசிக்கும்
காளவிடம் உண்ணவன்று வாங்கித் தரித்தகைபோல்
வாளைவென்ற நீல மதர்விழியாள் — ஆளுடையோன்
கங்கையுடன் செஞ்சடையிற் கட்டி இருக்குமிளங்
திங்களைப்போல் வாய்த்த திருநுதலாள் — துங்கவரன்
தன்னைப் பழிக்குந் தவமில்லார் உள்ளம்போல்
கன்னம் கறுத்த கருங்குழலாள் — பொன்னங்
கலையணிந்து மங்கையருக் கானபணி எல்லாம்
இலகுதிரு மேனிக் கிழைத்த — அலகிலாப்
புண்டரீக மீதிலுறை பூவையர்கள் ஒன்றாகி
மண்டனிலே வந்துதித்த வாறுபோல் — கொண்ட
சடலமெல்லாம் கற்பூர வாசந் தவள
பொடியுடனே நீறும் புனைந்து — படியுள்ளோர்
உள்ளங் கவர்வோர் உவந்துகைக் கொண்டினிய
தெள்ளுதமிழ்ச் செப்பறைவாழ் தேசிகனை — வெள்ளம்

பரந்த சடையானைப் பாடியே பந்தைத்
துரந்தடித்துத் தோகையர்கள் சூழ — நிரந்தரமாய்
நின்றுவிளை யாடுதலும் நீலமணிக் கண்டன்
பொன்றிகழும் முத்துநிறை பூம்பந்தர் — ஒன்றி
எழுந்தருளக் கண்டே எழில்மஞ்ஞை போலச்
செழுங்குழலார் கூடவுடன் சென்றே — தழைந்தருள்
பொங்கு திருச்செப் பறையுறை பூரணன்தன்
செங்கனக மேருச் சிலையுச்சி — தங்கிவரு
செக்கர்வான் சூழச் சிறந்தவிர் கற்பதியும்
மிக்க கலைநிறைந்த வெண்மதியும் — ஒக்க
இருந்ததுபோல் மீன்விழியும் வெண்டலையும் ஏய்ந்து
திருந்து சடைப்பாம்பும் செம்பொன் — விரித்தவிந்த
மாமலையிற் கண்ட மருவும் இளமதிபோல்
தூயநிறச் சூகரத்தில் தொல்லெயிற்றைத் — தாமே
அணிந்தமணிக் கந்தரமும் அந்தமலை தன்னில்
தணிந்தமுகில் வட்டமாய்ச் சார்ந்தே — அணைந்ததுபோல்
ஆமை முதுகணிந்த அம்பொன் உரமும்அந்த
ஏம வரையில் எழிலாரும் — கோமன்னும்
வெள்ளி மலையைப் பதித்ததுபோல மின்னொளிசேர்
புள்ளியுடை ஆடைபுனைந் தரையில் — துள்ளிவரும்
சிங்கத்தின் சென்னிதனைச் சேர்த்த அழகும்அந்தத்
துங்கவரை யைஇமயம் தோய்ந்ததுபோல — சங்கொத்த
நீறு பொலிந்தவருள் நேய வடிவழகும்
மாறிலா அந்த வரைத்தளவில் — கூறரிய
செங்கமலம் தன்னில்ஒரு செங்கமலம் பூத்ததெனச்
சங்கன்விழி சாத்துமொரு தாள்அழகும் — பொங்குமதி
தன்னையன்றி அந்தமலை தன்னையும்சூழ், வேடம்போல்
பொன்னனின் மணி வாசிப் பொலியழகும் — மின்னனையாள்
கண்டாள் கவலைக் கடலுற்றாள் காமநோய்
கொண்டாள் அவள்மயலார் கூறுவார் — தண்டரளத்

தண்ணகத்தன் தோழியரைப் பார்த்தாள் தரையையுண்ட
அண்ணலைப்போல் ஆத்தவம்செய் தாரென்றாள் — வண்ணமலர்
தாரீர் செழுங்கொன்றை தாரீரேல் என்னுயிரைப்
பாரீர் அதன்றி அகலென்றாள் — பார்மீதில்
வேய்முத்த மாகி விளங்கினீர் என்மதுர
வாய்முத்தம் கொண்டால் மறுவுண்டோ — தாய்முத்தம்
கண்ணால் உதிர்த்தொருத்தி கட்டக் குழைந்தவந்தப்
பெண்ணாசை இல்லையோ பேசுவீர் — மண்மீதில்
பெண்வதைத்தார் பாவம் பெரிதென்றீர் அந்தவிதி
உண்மையுமக் கில்லையோ ஓதுமெனக் — கண்ணாலே
வெண்டரளம் சிந்தவிந்த மென்மொழிகள் கூறலுமே
அண்டன் முகம்பார்த் தகன்றிடலும் — பண்டையினில்
சைவத் தபோதனர்கள் சாற்றுமுறை மெய்யன்றி
மெய்வைத்த தல்லவெறும் வீணென்றாள் — தையலீர்
வேண்டுவார் வேண்டுவதே ஈவானென் றார்விளங்கக்
காண்டல் அவர்க்கன்றிக் காணென்றாள் — நீண்ட
வரியளவோ அல்லவய வாரளவோ அல்ல
முருக்கார் மலரிதழி முன்னி — உருகாநின்
றேனுக் குதவாதான் எப்பொருளும் ஈவனென்
றானுற்றுச் சொன்ன தகவன்றிப் — பானற்கண்
மங்கையீர் காம தகனனென்றார் மாமறையோர்
தங்கமலர்ப் பாதம் தனைத்தொழலும் — இங்கென்மேல்
எண்ணிலா வாளிசொரி யாநின்றால் இதனைக்
கண்ணினாற் கண்டானோ காரிகையீர் — எண்ணறியோன்
தன்னைத் தொழுவோர் தமக்குவினை யில்லையென்றார்
என்னைப்போல் ஆர்துயரம் எய்தினார் — மின்னனையீர்!
எண்ணிலா மாதர்நிற்க என்தனக்கே இந்தவிதி
பண்ணினா னேகமலப் பாவியென்றாள் — நண்ணும்
மலர்வேள்தாள் நம்மையிவள் வைதனளென் றெண்ணி
அலர்நோக்கி நின்றெறிந்தான் அந்தோ — இலகு

படந்தருபேர் அல்குற் பணிமொழியார் ஆற்ற
அடர்ந்ததுயர் சற்றே அகன்றாள் — மடந்தை
வருமுனிவர்க் கேரு மதன்கலை உண்மை
தரும் அருள்குருசந் தானம் — விரகமதன்
கற்றவர்கள் என்றுங் கடினப் பகையைவென்று
வெற்றிகொள வைத்திருக்கும் வீரவாள் — சிற்பரமன்
மன்மதனை வென்றநாள் மன்னுமவன் சின்னமெலாம்
கன்னி இவட்களித்தான் காமுற்றே — என்னஅவன்
வாளிபோற் கையினாள் வாளிபோற் காலினாள்
வாளிபோற் சிவந்த வாயினாள் — வாளிபோற்
சின்ன நகையாள் திருவினாள் — பன்னமுற
மன்னும் இருபூண் வனமுலையாள் அன்னாள்
சிலையெழுதும் தோளாள் செழுமுகில்போல் துன்னும்
குழலாள்வண் கையாள்போற் செம்பொன் வடிவாள்
கிள்ளைவாய் போலும் உகிரினாள் கீர்த்திதரும்
வெள்ளைக் குடைபோல் மிளிர்முகத்தாள் — துன்னுங்
கொடிபோய் விழியினாள் கொல்மதனன் அன்ன
வடிவாள் வடிவொக்கும் மாதர் — துடியிடையில்
பொன்எழுத்துப் பட்டுடுத்துப் பொன்னணிக ளும்அணிந்து
பொன்னரிமா லைமுல்லைப் பூவணிந்து — வன்னமலர்ச்
செங்கையிலே எங்கள் சிவன்நா மந்தரித்துத்
தங்கநிற வீணையொன்று தானெடுத்து — துங்கநிலை
மேடை தனிலேறி மின்னனையார் சூழ்ந்திருப்ப
ஆடிவருங் கோதில் அமுதத்தை — நேடி
அயன்மால் அறியா அறனை உயிரின்
பயனாகிய கருணைப் பாலை — நயமாகப்
போற்றுமவர் உள்ளம் பொறுக்கரிய அன்பருளி
தோற்றுங் கருணைநடச் சுந்தரனை — மாற்றிலாச்
செந்தேனைச் செந்தமிழாற் சிந்தைதெளி சம்பந்தன்
முந்த உரைத்த முது ம்றையைச — சந்தமுடன

பாடலுமே பாரிற் பரந்தவுயிர் வர்க்கமெலாம்
நாடியந்த ஓசை நயத்தினால் — கூடி
இருக்கும் பொழுதில் இமையோர் இருவர்
இருக்கும் அறியா இறைவன் — முருக்கிதழ்வாய்க்
கிள்ளையொடு நல்ல கிளர்முத்தின் பந்தர்மிசை
வெள்ளை மதிபோல் மிளிர்நுதலாள் — துள்ளுவிழித்
தோழியர்கள் கண்டு தொழுதுமனை யுட்புகுந்து
வாழிமட அன்னமே மாலறியா — ஆழிஎனச்
செப்பறைவாழ் ஆனந்தச் செந்தேன் திருவுருவுக்
கொப்பரிய ஒண்ணா உமைபங்கன் — மெய்ப்புகழ்சேர்
அய்யன் அணிமுத்தின் பந்தர் மிசையழகார்
செய்ய திருவீதி சென்றணைந்தான் — தையலே!
என்ற உடனே இசையின் அசைவகன்று
மன்றலம்பூங் கொன்றைமணி வாசல்வந்து — நின்று
மதிநுதலி செப்பறைவாழ் மன்னுங் கரும்பை
விதியறியா ஞான விளக்கைக் — கதிசேர்
உலகமெல் லாந்தன் உருவாய் ஒருபால்
நிலவும் உறுப்பால் நிகழா — இலகியபேர்
இச்சை அறிவுதொழில் என்னுமிந்தச் சக்திகளே
வைச்சவருள் உட்கரண மாகவே — கொச்சையுயிர்
எல்லாம் அறிவெய்த எற்றஅருள் ஐந்தொழிலே
நல்லதிரு நாடகத்தின் நற்றொழிலாய் — அல்லலற
ஆடும் பெருமானை ஆரா அமுதைமறை
பாடுங் கருணைப் பசும்பொன்னைக் — கூடும்
அறிவுக் கறிவாம் அமுதை அறிவாய்ப்
பிறியப் படாக்கருணைப் பேற்றை — நிறையவே
கண்டுதொழு தானந்தக் கண்ணீர் முலைமீதில்
தண்டரள மாலைபோல் தான்வீழ — எண்டோள்
அருமருந்தே அன்பேஎன் அன்பினுள் என்றும்
மருவும் சுகமருளும் வாழ்வே — அருவினையேன்

என்பெலாம் தண்ணீர் எனவுருக்கி ஏழையேன்
முன்பரி யாலளித்த முன்னோன்என் — துன்பறக்
கண்டார்கள் காமநோய் காணார்கள் என்றுமறை
கொண்டா டியதெனக்குக் கூடாதோ — வண்டலர்பூ
மாரனைச் சற்றேவிலக்க மாட்டீரோமன்னு கொன்றைத்
தாரருளி னாற்கருணை தாழ்வதுண்டோ — கார்வேடன்
வாயமுதம் உண்டீர் மகிழ்ந்தெனது வாயிலினி
தாயமுதம் உண்டால் தடையுண்டோ — நேயமார்
வேயணைந்து முத்தாய் விளங்கினீர் என்னிருதோள்
வேயணைந்து முத்தமிடா வீறென்னோ — தூயருக்கன்
திருவின் மகன்எங்கும் சேர்வெற்றி கொண்டு
தரையதனில் நாட்செய் தரும — கருமம்
முறியுந் தவரைவென்ற மோகினியைப் பூமி
அறியும் படியுதித்த அன்னம் — நெடுவேழம்
வென்ற கருணை விமலன் வடிவுமந்தக்
குன்றின்வடி வுங்காட்டுங் கொள்கையென — ஒன்றும்
தவள வடிவுமதில் தங்கியொளி பூத்த
பவளச் சடையினப் பாம்பும் — குவளைதரு
கண்டமும் அந்தக் கரியின் மணிநீலம்
மண்டுகுழ லாள்திருக்கு வண்மையும்போல் — தண்டருசேர்த்
துய்யநீற் றானடுவில் தோன்றும் கருமணியும்
மைவரியும் வாய்த்த மதிர்விழியாள் — அய்யனருள்
முத்தன் வடிவில் தரிக்குமுத் தன்பகர்ந்த
மத்தக் கரியின் மருப்புமுந்தைச் — சுத்தமலர்
அன்ன கரத்தில் அமைத்ததுபோ லேசிவந்து
சின்னகையும் காட்டுந் திருவனாள் — முன்னுரைத்த
வித்தக வேழத்தைப் பிளந்த விமலனந்த
மத்தகத்தில் ஓர்பதத்தை வைத்ததுபோல் — நித்திலஞ்சேர்
கற்றையொளி காட்டுங் கனகமணி வானிந்து
பொற்றிவலை பூத்த புணர்முலையாள் — மற்றக்

கரியுரித்த எங்கோன் கரத்தில் கரியின்
குருதி மருவுதிருக் கோலம் — பொருவுமுயர்
உம்பருக்கும் எட்டா ஒளிபூத் திருந்தவனச்
செம்பட் டசைத்தமணிச் சிற்றிடையாள் — வம்பலரும்
செம்பொன் கலனும் செழுங்குங் குமம்புழுகும்
மெய்யில் அணிந்தழகை மேவியே — கும்பமுலை
மங்கையர்கள் வாழ்ந்தமணி மாளிகை யுட்புகுந்து
பங்கயமா தென்னவொரு பங்கனைய — அங்கழகாச்
செய்யுமொரு மன்றத்தில் தீர்த்தன் கருணைதரு
மெய்யெழுதி வைத்த விதங்கண்டான் — அய்யன்
கருணை பொழிமுகமும் கந்தரமும் வெள்ளைத்
தருண மதிச்சடையும் தாழ்த்த — கரகமலம்
நான்கும் அடியவர்க்கு நன்னெறியான் என்னுமொரு
வான்கருணை செய்யும் மலர்த்தாளும் — தேன்பாரும்
சொல்லி இடத்தழகும் தூய நடத்தழகும்
நல்வான் விழிகுளிர நாடியே — முல்லை
நகையாரைப் பார்த்திந்த நாயகனார் என்ன
முகையார் முலைபடவார் முத்தே — தகையாரும்
கத்தனருட் செப்பறைவாழ் கண்ணுதலோன் கண்டறியா
நித்தன் அழகு நிருத்தன்காண் — பத்தியினால்
இந்தமணி மன்றத் தெழுதி வைத்தானெனவே
மந்தரம்போற் கொங்கை மதிமயங்கிச் — சுந்தரமார்
நீலவிழி யீரிந்த நிந்தனையான் கூடுதற்கிங்
கேலுவகை சொல்லும் எனச்சொன்னக் — கோலமலர்க்
கன்னிகைநீ என்ன கருதியது கஞ்சமலர்
மன்னியகோன் மாயன் மறைநான்கும் — என்றும்
கருதவொண்ணாக் காரணனைக் காலகண்டன் தன்னை
மருவுவதார் முன்செய் வரத்தால் — தரணிமிசை
வந்து பிறந்தும் வளர்ந்தும் முனையாயன்
சிந்தை மகிழச் சிறந்திருந்தேன் — நந்தன்மனம்

செய்ய அணைந்தளவில் சிந்தைக் கரியபிரான்
உய்யும் வினையொன் றேந்தியே — மெய்யாய்
அடைந்தடிமை என்ன அவனுடன் வாக்காடி
தொடர்ந்தணைந்த சுந்தரனே அல்லால் — வடந்திகழ்பூங்
கொங்கையே இவ்வுலகில் கூடஎளி தோவென்ன
மங்கை மனங்கலங்கி வாடினாள் — கங்கை
தரித்தபிரான் வேளைத் தழல்விழியி னாலே
எரித்தபிரான் செப்பறைவாழ் எங்கோன் — விரித்தகதிர்
வெண்முத்தின் பந்தர் மிசைவரலும் மெல்லியலி
கண்முத் தனையார்கள் கண்டோடிப் — பெண்முத்தே
செப்பறைவேய் முத்தன் தெருளமனை வாசலின்கண்
இப்பொழுது வந்தான்காண் என்னவே — மெய்ப்புளகம்
ஆகிமட மாதரொடும் அப்பொன்மணி வாசல்வந்து
பாகனைய சொல்லாள் பணிந்தழகார் — ஏகன்
பிரமன் படைக்கப் பிடித்த படியார்
கரமும் கருணையரி காக்க — வரமாய்
அமைந்த கரமும் அரனழிக்கும் எல்லாம்
இமைக்குள் அழிக்கும் எரியும் — தமக்குநிகர்
இல்லா மகேசன் மறைக்க இருள்மலத்தில்
நில்லா வனகோ வதமும் — சொல்லார்
சிவன்கருணை யாவுக்கும் செய்யச் சிலர்பார்
பவஞ்செறியார் செம்பொற் பதமும் — நலஞ்செய்த
செந்தா மரைமுகமும் செவ்வான மெய்யழகும்
இந்தார் சடையு மியாவரையும் — வந்தாயோ
என்றதுபோல் நின்ற குறிப்பழகும் என்னுளத்தில்
ஒன்றி இருக்கும் ஒளிநகையும் — கன்றெறிந்த
மாயன் உடல்கறுக்க வந்தநஞ்சை மாமிடறும்
வேயனைய தோளி விழியுற்றும் — ஏயுமவன்
சாரூபம் பெற்றவர்போல் தங்கியது பொன்னிறமும்
மேருவுறு நிரும் வேட்கையரின் — காரூறும்

கந்தரத் தோன்கனல் கண்ணும் இமைப்பிலது
செந்திருவுக் காடை திகம்பரமே — பந்தமிகு
தாய்தந்தை சுற்றத்தார் தங்கும் பகைநட்
பேய்கின்ற யாவும் இலையவன்தன் — மேயதிருக்
கொள்கையே ஆயினாள் கோதை படுந்துயரம்
விள்ளஎளி தோநம்மால் வேளைவென்ற — வள்ளலே
என்றாள் இரங்கினாள் ஏழைக் கிரங்குவதிங்
கொன்றாதோ என்றென் றுருகினாள் — பொன்றயங்கு
செஞ்சடையான் கானார்போற் சேர்ந்தான் ஒருவீதி
வெஞ்சமர்வேள் கண்டிந்த மெல்லியலை — வஞ்ச
அரனுருவம் போலிருந்தாள் அம்மாவென் றஞ்சிப்
பொருதொழில்இல் லாதகலப் போனான் — தெரிவை
பரவு முனிவருளப் பங்கயத்தின் உள்ளே
மருவி இருக்குமட வன்னம் — திருமருவும்
வையத்தில் உள்ளோர்கள் மன்னு மதபூசை
செய்ய மருவுந் திருக்கோயில் — உய்யும்
தவருயிரை உண்ணவெண்ணித் தன்னுருவம் கண்டால்
அவர்கள் முனிவரென அஞ்சி — அவர்பயிலாப்
பாச இருவிழியாய் பாரணியும் முத்தலைவேய்த்
தேசுடைய கொங்கையெனும் செப்பாம் — இதய
வடிவாள் உரோம வசியாகு மாயக்
கொடிபோல் உருவுகொண்ட கூற்றம் — படிமீதில்
ஆடவர்கள் என்னும் அவர்க்கெல்லாம் சங்கீதம்
பாடித் தழலும் பணிக்கமலம் — கூடியே
பூமடந்தை மூக்கழிந்து போனாளென் றெண்ணியவர்
நாமம் விளங்க நலக்கிள்ளை — காமன்
நிலவுபுகழ் ஆடவர்கள் எல்லாரும் போற்றக்
குலவி இருந்தகொலுக் கூட்டம் — மலர்வாசக்
கண்ணும் அகக்கண்ணும் தானாகத் தாங்கவென்
றெண்ணிக் கடல்கடைய எண்ணுநாள் — நண்ணுமறை

நன்றாக என்றது போல் நன்கமலத் தானல்
அருட்பா லணைந்தமலம் ஆக்கிப் — பொருட்பாவை
பாடவைத்த வெற்றிப் பரமகுரு வந்தானென்
றோடவைத்த பொற்சின்னம் ஊதலுமே — நீடுமொலி
கேட்டாள் மனமகிழ்ந்தாள் கேடிலா ஆனந்தத்
தாட்டா மரையமுது தானுண்ண — வேட்டாரும்
வண்டேபோல் வாசலின்கண் வந்தாள் மலர்ந்ததிருத்
தண்டா மறைமுகமும் தங்கருணை — கொண்ட
விழியழகும் தோடும் விளங்குகண்ணீர் சொரியப்
புளகமலர் முன்னவனைக் கூடியே — அன்னம்
வருந்துதலும் ஆரணங்கள் காணா மருளுநீ
தனையே தனக்கொப்பாக வந்தான் — எனையாள்
திருச்சடையன் வந்தான் செப்பறையில் வாழும்
கூத்தினி யாவர்க்குங் கொளவந்தான் — வாய்த்தவருள்
சங்கரி கண்களிப்பச் சங்கரிங்காச் செப்பறையில்
பொங்கழகு செய்யநடிப் போன்வந்தான் — பங்கமறும்
பாவநா சம்மிருந்தே பாவமழித் தோன்வந்தான்
மேவுநல வெற்றியளித் தோன்வந்தான் — பாவலர்சொல்
எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கன்றே — முன்னொன்றச்
சொன்ன மொழியை விளக்கினான் தூமொழியே
மன்னும் பரியாய் வருவனெனப் — பன்னுமறை
சொல்லுகையி னாலுமருட் சோதிகொண்ட மேனிக்கும்
ஒல்குமரி மேனிக்கும் ஒப்பாமோ — வெல்லும்
வடுகக் கடவுள் பிரமன்தலையைக் கிள்ளி
இடுபிச்சை மாலேயென் றேற்க — வடுவாக
மத்தகத்தைக் கீறிஎழு வாரியென வேயுதிரம்
அத்தனையும் வார்க்க அமையாமல் — வித்தகமால்
மண்ணின் விழுந்தளவில் மாமலர்சேர் மையாரும்

கண்ணி உமைகணவா காவென்ன — அண்ணல்
அருள்வந்தன் றேயெழுப்ப ஆர்ந்ததுயர் நீங்கித்
தெருள்வந்தே உய்த்தான் திருமால் — சுருள்கொண்ட
கோதாய் இதனுல்மால் கூடுமுயிர் காணுதவர்
ஓதார் பதியென்றே உத்தமர்கள் — ஆதலினுல்
ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியென்முர் வாதவூர்த் தூயரென — வேதியனுர்
சொன்ன வுடனகன் ருேதுதிரு வெம்பாவை
உத்தமியென் ருதிமறை யோர்புகழ — அத்தன்
மறையோர் புகழல வந்தமகிழ் வாகி
இறையேசற் றேயியம் பென்ன — அறையஅவர்
ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியையோம் என்றலுமே தூம்மொழியாள் — வேதியரே
இந்தப் பதத்தின் பொருளை இயம்பிமற்றச்
சந்த இசைத்தமிழைச் சாற்றுமெனச் — செந்திருவே
நீதி உலகில் நிறுத்த நிகரில்லா
வேதம் உரைத்தவொரு வேதியன்தான் — கோதிலா
மாணிக்க வாசகனே என்றுமறை மன்னுரைத்த
ஆணித் தமிழின் அரும்பொருளைப் — பூணிலகும்
அன்னமே சொல்ல எளிதல்ல ஆயினுங்கேள்
மன்னும் அவனருளால் வந்தவகை — உன்னியதை
ஓதுவேன் இவ்வுலகில் ஓர்மொழிக் கெல்லாம்நல்
ஏதுவினுல் தோன்றி இலதாகும் — போதமுறை
உளநின்றே காண ஒளிருகும் உலகில்
நிறைவின்றி யேகுறைந்து நிற்கும் — முறைமையினுல்
ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியென்றே எங்கோனைச் சொன்னதுகாண் — கோதையே!
என்ன மறையவரே ஏதேனும் எங்கள்மலைப்
பொன்னே உளம்வருந்திப் பொற்றுெடியே — என்ன
குறப்பெண்ணே அந்தக் குழகனைக் கூடச்

சிறக்குங் குறியெனக்குச் செப்பாய் — பறக்கும்
மயிலுடையோன் பங்கிருக்கும் வள்ளி குலக்
குயிலினத்தேம் கூறும் குறிகள் — பயிலும்
இலகுவிழித் தேனே முகத்துத் தெளிவும்
இலகும் இடையின் எழிலும் — நலமணமார்
கொன்றை அணிந்தோன் குழகன் மழவிடையோன்
மன்றில் நடனமிடும் மாணிக்கம் — வென்றிதரு
செப்பறைவாழ் கட்டிச் செழும்பொன் உனையணைய
இப்பொழுதே வந்திங் கிணங்குமென — மைப்பயிலும்
கண்டத்தோன் அண்டத்தோன் காம தகனவிழி
முண்டத்தோன் என்றும் முதிராதோன் — பண்டைமறை
காணாப் பரமன் கனக சபைராசன்
வீணார் மனத்திலென்றும் மேவாதோன் — பூணாகம்
ஆகம் புனைந்தோன் அணிமுத்தின் பந்தர்மிசைத்
தோகைப்பொன் னோடுவந்து தோன்றுதலும் — பாகுற்ற
சொல்லிதிருத் தோழியர்கள் தூயவனைக் கண்டோடி
மெல்லியல்நீ வேட்கையுறு மேலோனின் — நல்லியலார்
பூவில் உறைமடவார் பொன்னாணும் போகாமற்
காத்தருள வந்த கருநஞ்சம் உண்டழகு
பூத்த கருணைப் புகழுடையோன் — வாய்த்த
அரிஅயனும் வாசவனும் அல்லா தவரும்
பொருவில் லவர்குலமும் போகம் — மருவியே
வந்த புரங்கள் மடிந்து பொடியாகச்
சிந்த நகைத்த திருவுடையோன் — கந்தனைமுன்
பெற்றுவருஞ் சூரன் பிலமழித்து மால்முதலோர்
கொற்றம் அளித்த குணமுடையோன் — வெற்றிதரு
தையலையுண் டாக்கிவருந் தாருகனைக் கொன்றமார்
செய்கை அளித்த திறனுடையோன் — வெய்ய
சலந்தரனைக் கீறிய சக்கரமாற் கீந்து
மலங்கா துலகளிக்க வைத்தோன் — கலங்காமற்

போற்று மறைச்சிறுவன் புண்ணியத்தாற் பொங்கிவரு
கூற்றம் உதைத்த குரைகழலான் — ஏற்றுக்
கொடியுடையோன் செப்பறைவாழ் கூத்தன்மால் வாய்த்த
வடிவுடைய மங்கைபுணர் மன்னன் — படிமிசையிற்
கைகண்ட தெய்வம் கருணைக் கடலொளியோன்
பொய்கண்ட நெஞ்சிற் பொருந்தாதோன் — அய்யன்
என்றுமே ஓங்கி — இறங்கி
மலங்கியொளி மாணிக்கத் தாற்செய் சிலம்பு
பலஅமையும் செந்தாளாள் பாரின் — இலங்குமதி
வேணியனை அல்லாது வேலை தனைக்கடைய
வர்ணிலவு செய்யு மவருளம்போல் — நாணி
இருக்கும் இடையாள் இருந்தவத்தோர் நெஞ்சை
உருக்கும் இடையாள் ஒருநாள் — மருக்கமழ்பூங்
கூந்தல் அவிழ்த்து முடித்துக் குவிமுலையிற்
சாந்தெழுதிப் பொற்கல கள் தாமணிந் — தேந்திழையார்
வாழ்த்த மலரணைமேல் வந்திருக்கும் போதுமுடி
தாழ்ந்தே ஒருகுறத்தி தானணைந்து — வீழ்ந்த
கரியுரிவை போர்த்த கடவுளைநான் பாடிப்
பரவுதொழிலுடையேன் பால்போல் — உரையுடையாய்
உன்னுளத்தில் எண்ணுங் குறியுரைப்பேன் என்னவவள்
தன்முகத்தைப் பார்த்தருளித் தையலாள் — வன்னக்
குறமகளே உங்கள் குடிப்பதியே தென்ன
அறவளம் ஆகவந்த அரசே — திறமிருக்கும்
செங்கமல மங்கலநாண் சீர்வாணி மங்கலநாண்
பொங்கும், அயிராணி பொன்னுணும் — துங்கமிகு
தேவெலாம் எண்ண மழவிடையோன் செல்வியொடும்
ஆவலடி யாருள்ள ஆசகலத் — தாவியே
வந்தான் எனஒருத்தி வாசலிடைக் கண்ணுறலும்
கொந்தார் குழலாள் குழுவினொடும் — தந்திரு
வாசலின்கண் வந்தாள் மதனைவென்ற முக்கணருள்

தேசன் முகத்தைத் தெரிசித்தாள் — வாசமது
பொங்கு கமல முகமலர்ந்தாள் பூங்கனிவாய்
செங்குமுதம் போலத் திறந்தாள்சீர்க் — கொங்கலரும்
வெண்ணெய் எனவே மனநெகிழ்ந்தாள் வேதமெல்லாம்
நண்ணும் திருவாயில் நஞ்சுசெறி — வண்ண
மணிமிடறும் கண்டாள் வளர்க்குங் கிளிபோல்
தணிவில்லா மையல் தலைக்கொண் — டணியார்
கலைமயில் போலக் கருதினாள் காணப்
பலநிலவு பாதத்தைப் பார்த்தாள் — இலகுமணி
வண்டேபோல் நின்று மயங்கினாள் மாதின்மயல்
கண்டே அருள்செய் கருணையர்போல் — தண்டேன்
இதழியுத வத்தனில் எய்த்த நிறத்தை
உதவி அகன்றான் ஓர்நல் — மதவேளும்
வாரிணங்கு கொங்கைதுயர் கண்டிரங்கி வாசமலர்
போரிணங்கச் செய்யாதே போயினான் — பேரிளம்பெண்
தம்மை உணர்ந்தே தமதுளத்தி லேபொருந்தி
மெய்ம்மை அருள்ஞான விளக்கொளியை — இம்மைதனில்
கண்டே இவனுக் கலங்கரிக்கக் காரணன்மேல்
உண்டோ பொருளென் றுன்னியே — பண்டைப்
பொருளனைத்தும் விட்டவருட் போலவே அந்தன்
திருவுருவின் நம்மைத் தெளிந்தோ — பொருவரிய
கையில்வளை பூணாள் கழுநீர் மலர்முடியாள்
செய்யவிழி மையெழுதச் சிந்தியாள் — பையரவம்
சேர்ந்த அரையிலணி மேகலைச் சிற்றிடையாள்
வாய்ந்த திலகமிட வாஞ்சியாள் — காய்ந்தசினத்
தக்கனழல் வேள்விபட்ட தெல்லாம் தரணியில்
மக்கள் அறியவந்த வாறென்னத் — துக்கமிகு
மன்னவன் வேள்வி கலந்தசுரர் மாட்சிபோல்
மன்னும் சிறிய மருங்குலாள் — நின்றலற
வந்ததிறல் வீரன் வடிவினைக்கண் டஞ்சியே

முந்தமகம் நீங்கா முனிவர்குழாம் — தந்தம்
மைந்தன் உயிரெடுத் ததுபோல மற்றவன்
தந்தலையை மாற்றித் தகர்த்தலையை — முந்தவவன்
வைத்ததென் னோமா வலிமீதி லேசரிந்து
முத்துவடம் தாங்கும் முலையினாள் — வித்தகமால்
அன்றுவிறல் வீரனுடன் ஆடல் புரிந்தளவில்
வென்றிமலர்க் கைச்சங்க வெற்றிகெட — நன்றுடையோன்
கைக்கொண்ட சங்கேபோல் கந்தரத்தாள் கந்தனென
ஸ்மக்கொண்ட வேள்விதனில் வந்த — வியத்தோடு
மானின் விழிபோல் விழியினாள் மன்னு
சுரரின் பொலிவாள் தொடைவீரன் — தன்முன்
புறப்படலுங் கண்டோடும் பொற்பதியைக் காக்கும்
முறைக்குயில்போற் கூறும் மொழியாள் — பெறற்கரிய
செம்பொன்னின் மேடைமிசை சிங்கா சனத்திருந்து
கும்பமுலை மாதர்புகழ் கூறவே — வம்புலவும்
காமகலை தன்னைக் கருத்துறவே ஒதுங்காற்
சோம கலையணிந்த சுந்தரத்தோன் — நாமம்
புகலும் ஒருமறையோன் போற்றரமுங் கண்டே
இகல்புரியும் கண்ணன்முன் ஏத்த — முகையனைய
கொங்கைதிரு வேதியரைக் கும்பிட்டே கூறரிய
சிங்கவணை யொன்று திருத்தியே — அங்கதன்மேல்
வைத்தரிய மாதவரே மன்னும் திருக்கரத்தில்
பொத்தகமே தென்று புகலவே — வித்தகரும்
தேனே இதனுண்மை செப்பக்கேள் தென்மதுரைக்
கோன்வா சலுக்குரிமை கொண்டசீர் — ஊனமிலா
மந்திரியாய் நீதி வழுவாம லேமறையின்
தந்திரியாய்ச் சொல்லுநா டாள்வழுதி — சிந்தை
வரும்புரவி கொண்டளித்த வள்ளல் மகிழத்
தரும்பரிசெல் லாங்கண்ட தக்கோன் — திருவருளின்
தன்னைப் பெருந்துறையிற் காணலுமே தன்னிகரில்

முன்னைப் பெரியதவம் முற்றியிட — அன்னைதனக்
கண்டே மதலையுள்ளம் காமித் திடுவதுபோல்
தண்டா மரைத்தாள் தனைப்பிடித்துக் — கொண்டே
சென்னக் கடல்கடந்து செந்தமிழின் மாலை
தனையொப்பி னுலடுக்கிச் சாத்தி — முனைவனைமுன்
தலையிற்கங் கொண்டதுபோல் தக்கன் தலையைக்
கொலைபறக்கும் வாளினுற் குத்தி — மலைவளைத்தோன்
கண்ணப்பன் காணவே கண்ணுதிரம் பாய்ந்திருந்தான்
வண்ணம் தயாரித் தெடுத்தண்டம் — எண்ணித்
தலையைத் துடிக்கக்கை வாளால் துணித்துத்
தலையைஎங் கோமுன்பு தாங்க — மலைமடந்தை
பங்கன் அரையிற் பரித்தனன்காண் — செங்கோ
னகமெயி லேமச்சம் காராமை பன்றி
அனையசெய லாகுமி தன்றி — முனைவன்
வகுத்த ஒழுக்கம் வழுவிலோர்க் கென்றும்
சுகத்தை அளிக்குந் தொழில்போல் — மிகுத்தபுகழ்க்
கோசலைக்குப் பிள்ளையாய்க் கூடிச் சனகனருள்
வாசக் குழலை மணஞ்செய்து — நேசம்
பெருகுதந்தை சொன்னமுறை பேணி அரக்கன்
திருமகளைக் கொண்டகலச் சென்றே — வெருவ
அரக்கன் தனைக்கலக்கி ஆங்கவனைக் கொன்று
பெருக்கும் பழியைப் பெயர்க்க — உருக்கிரா
மன்முத லோர்க்கு மதாங்கா ரங்கெடுத்தான்
தன்னருளின் மாவலிபால் தாவடிமுன் றும்பெற்றே
அங்கவரை நோக்கி அபயம் அளித்தருளே
தங்கும்அடல் வீரன் தனைப்பார்த்துத் — துங்கச்
சரபவுரு வாய்அரியைச் சார்ந்துமலம் போக்க
அருள்புரிவாய் என்ன அளித்த — பொருவீரன்
வந்தரியே நீஅளிக்கும் வரமென்ன மண்ணுலகம்
சிந்தியுறக் காத்தருளைச் செய்யென்னப் பந்தனையோன்

காத்தேன் படைத்தேன் கழிப்பேன்நான் என்றலுமே
கூத்தாடிப் புள்ளினுருக் கொண்டருளி — வாய்த்த
கிரியையி னாலளித்த கேசவ மாயன்
கிரிமந் தனைவெல்லக் கேடில் — நரனமர்
சிங்க வடிவாகிச் செம்பொன் வடிவோனை
மங்க அளித்த மனக்களிப்பால் — அங்கண்
படைத்தேன் அளித்தேன் பரமன்யான் இப்போ
துடைப்பேன்என் றெவ்வுலகும் சோர — இடுக்கண்
இயற்ற அமரரெலாம் எம்மைக்காப் பாயே
துயர்படவே கொல்லத் துணிந்தான் — அயர்வைத்
தணிப்பான் கயிலைவளர் சம்புவென உம்பர்
எணித்தேவ நாயகன்முன் எய்த — மணிக்கண்டன்
நான்மறையன் முக்கண்ணன் நாரியொரு பங்குடையோன்
மேன்மைதருநீறு மெய்க்கணிவோன் — ஊனமில்லான்
என்றுரைத் தோர்அன்றி இவ்விடத்தில் தோன்றினான்
பொன்றினான் என்று புகல்வருண்டோ — நன்றிதரு
ஞானத் தமிழ்க்குழவி நான்மாட நல்வழுதி
கூனேர்மை யும்ஞானம் கொள்ளவுணா — ஊனமில்லா
எந்தையார் எவ்வகையா ரோவென் றியம்பியுயர்
செந்தமிழின் உண்மை தெளிந்திலையோ — இந்த
உலகம் படைத்தளிப்போர் உன்னற் கரிய
இலகுமொழி யாகி இருந்தே — நிலவுகின்ற
தாதலினால் போற்றரிய ஒண்ணாதென் றானமறை
ஓதியது சற்றும் உணர்ந்திலையோ — ஆதியிடம்
நண்ணு மலைநங்கை நாடி விளையாடிப்
புண்ணியரின் கண்ணைப் புதைத்தலுமே — எண்ணில்
உலகம் இருளாக ஒண்ணாதற் கண்ணாலே
இலகும் ஒளிபரப்பி எங்கும் — அலகிலுயிர்
போதம் இழக்கையினாற் பூரணத்த சென்றனரே!
ஆதிமறை ஆகமங்கள் ஆக்கமுறை — வேதியரே

இந்தமுறை மையருக்கே ஏதோ என்னஅவன்
முந்துபவம் தன்னில் முளைத்ததெனப் — பந்தமிலாய்
ஆண்டருள் செய்வாய் பவந்தீர்த்தென அண்ணலருள்
தாண்டவஞ்செய் எங்கோன் சடையிதழி — பூண்டுகங்கை
ஆரும் தரித்தோன் அதற்கிசைந்தான் அங்கண்மால்
சாரும் பிறவிவகை சாற்றுவேன் — நீரும்
இருந்த சடையான் அடியை ஏத்தாதார்க் கேய்ந்த
விரிந்த தனம் கல்வியவர் வெற்றி — கரிந்துவிழச்
செய்வதுபோ லெங்கோனுற் செய்யும் சுவேச்சையுரு
வையமுண்டோன் கொண்ட வகையினுல் — உய்யமங்கை
உன்னரியோன் தன்னருளை உற்ற பிருகுமுனி
தன்மலையை நாடித் தபோதனனுய்ப் — பின்னவளைக்
கூடித் திகிரிக் குறியிட் டகலமுனி
நாடி யரனருளை நாடியே — ஊடியது
செய்யானீ ரைந்து செனனஞ் செறிகவென
வையமுண்டோன் கண்டு மனங்கலங்கி — ஐயன்
சரணத்தை நோக்கித் தவம்பண்ண முன்னு
மரணத்தை வென்றோன் அரியே — கரணத்தில்
வேண்டிய தென் சொல்லென்ன மெய்யோனே மெய்ப்பிருகுக
தூண்டுபவந்தன்னை தொலைத்தருள — வேண்டநிறை
செப்பறைவாழெங்கோன் திருந்து மெழில்நடன
ஒப்பரியோன் போந்தான் உலா.

உலா முற்றிற்று.

## இவ்வுலா ஆசிரியர் பாடிய செப்பறை வரலாற்றுப் பாடல்.



சிதம்பரமதினினும்பர்கள் பணியத் திருவுருக்கொண்ட பேரழகைக்
தெரிசனைசெய்த இரணிய வர்மன்திரும்பவுமிவ் வடிவாகப்
பதம்பெறக் கனகமயமதாய்ச்செய்த பரிசுகண்டிங்கு நாம்தரியோம்
பகர்வருங்கயிலை சிதம்பரம் காசிப்பலன்றரு தெட்சணமேயற்
புதம்பொலி பொருநாநதிக்கரை நடனம்புரிவதாய் அரன்இறைக்கருளும்
பொழுதுடனவனும் அடியர்பாற் றென்பாற்போக்கிக்கொண்டு செல்
கிதம்பெறு சுமையாயிருப்ப நாங்கனத்தவிடத்தினில் [அடியார்க்
வைத்திடென்றுரைக்க
இசைந்தெழுமடியார் பசியுநீர்த்தகையு மெய்திடச் சுமைகனமாகி!

சிதம்பவாவியு நன்னீழலுங் கண்டன்னிழனிலரணை வைத்தகன்று
நீரருந்தியபின் வந்துபார்த்திடவே நிருத்தனுமறைந்திட வெங்கும்
விதம்பல தேடிக்கண்டிடாதுடன்போய் விளங்குதென்மணவை
விளம்பிடவவனும் வியப்புமச்சமுற்றே விரைந்து மாறனுக்கு
மெல்லனை யிழிந்தெய்திக்
கதம்பவாவியைச் சூழ்புறங்களிலெனக் காவுகாடுகள் மலைதேடிக்கண்டிடா
துளத்தில் கொண்ட வேட்கையினுற்கண்டுயில் வெய்திடும்வேளை
யதந்தனில் அமரர்துந்துமிமுழங்க வாடிடக்கண்டு செப்பறையிலாடிட
அற்புதமாய்யருமையிட்டழைத்த அழகிய நடன நாயகனே.

இலங்குசீர் மணவைமாறனெல் வேலிக்கிரவு நண்பகனிதமெய்தி
யிறைவனைப் பணிந்துவந்து ராசரிக்கமியற்றிடுமன் பிணிக்கிரங்கிச்
சலங்கமிழ்ச்சடையன் கனவினினிறைநின்தாள் வருந்தாமல் நாமினியுன்
றனமனைக் கெதிராய் மன்னுவோமங்கு சார்ந்திடுவதற்கடையாள
மலங்கிடாதெறும்பு நம்மிடத்திருந்து வந்திறங்கிடுந்தானத்தில் வகுத்து
நம்முருவம் வணங்கிடென்றுரைக்க வள்ளலும்மப்படி வளுத்த
நலங்கிளர் காந்திமதியு நெல்வேலிநாதனுமாகி மாறனுக்கு நற்பதங
பிற்பலநாளும் நலம் பெறப் பூசைகொன்டருளில் [கொடுத்து

விலங்கலாம் பொதிகைவரும் பெருவெள்ளம் வியன்கர்கோவிலுமுலேத்து
வேலையேகதியாய் மனுக்களைத் தள்ளிவிடும்பொழுது உன்பணிக்காக
கலங்கிடாதைவர் தமைதருவித்திக் காத்திட அழகியகூத்தக்
கருணையாசனத்த ருணமே கோயில் கட்டுவாயென்றிறைக்கியம்ப
துலங்கு மிப் புவியிற்றலங்களுங்குயர்ந்த தொண்டைமண்டல
குலதிலகன்
தூயசீராறை மாமயிலப்பன் சுபுத்திரன் செகத்தினீழ்யோகன்
அலங்கலார்மருமத் தழகப்பன் ஆலயம் முழுவதும்செயவுன்
அடிநிழலவனுக்குதவு செப்பறையிலழகிய நடன நாயகனே.



## செப்பறை மடத்து
## அடியவர் குளாத்துள் ஒருவர் பாடியது.



வள்ளல் பொதியாசலத்திறைவர் முக்கள வீசர்வாமியுலகம்மையென்ன
மனதிஞலோ யுகந்தப்பிரளய வெள்ளம் வரப்பண்ணிவிச்சுவந்த
கொள்ள வெள்ளத்திலே செப்பறைக்கோவிலுங் குடியிருப்புமெடுபட
கொல்லென்று மனுவெலாஞ்சமுத்திரம் கெதியதாகக் கொண்டு
தள்ளி விடுநாள் தள்ளாமலய்யர்ரழகியகூத்த குருசாமிதன்னை [போய்த்
ஒருதருவில் வைத்துத் தர்க்காத்துநின்றனையுமறையினடம்
புரிசபாபதியையும் வெளிசெய்தாய்
நள்ளிருளிணட்டம் பயின்றறையிலாடு நடராச பததெரிசன
ஞானதேசிக பரமஞான பொன்னம்பல மெய்ஞ்ஞான
சற்குருசாமியே



திருச்சிற்றம்பலம்.

# செப்பறை, திரு. பொன்னம்பல தேசிகர் மடாதீன வரலாறு.

## குரு வணக்கம்

திருநந்திகேசுரர் நற்சத்தியமெஞ்ஞான தெரிசனிகள்
பரஞ்சோதி மாமுனிகள் வெண்ணெ
வருகுருமெய்கண்டமுனி யருணந்திசாமி மறைஞானசம்பந்தர்
வளர்ஞானபானு
வுருவென வந்திடும் மச்சிலுறை வணிகயோகி ஒங்கு
சந்திரா சேகரர் பின்புருசாமிநாதர்
அருள்பெறு சற்குரு பொன்னம்பல சற்குருசாமி
யிவர்களடியிணைகள் நமது சிரமதினில் வைத்திடுவோம்.

திருக்கைலாய பரம்பரை புறச்சந்தான முதற்குரு மெய்கண்ட தேவர். இவர் சிஷ்யர் திருத்துறையூர் அருணந்தி சிவம். இவர் சிஷ்யர் கடந்தை மறைஞானசம்பந்தர். இவர் சிஷ்யர்கள்

1. தில்லை உமாபதிசிவம்
2. திருவதிகை மச்சுச் செட்டியார். இவர்களில் மச்சுச் செட்டியார் என்ற மச்சிலுறை வணிகயோகிகள்பால் தில்லைக் கூத்தன் அருள்வழி சிஷ்யராக அமைந்தவர்கள் திருவையாற்று அந்தணர் குலத் திலகர்களாகிய சந்திரசேகரர், சாமிநாதர் என்னு மிருவர். இவர்கள் தில்லையில் தங்கிவரும் காலத்தில் சந்திர சேகரர் பரிபூரணமடைந்தனர். சாமிநாத தேசிகர் தம்மிடம் இறைவன் ஆணைப்படி நாகைப்பதியிலிருந்து வந்த சிவப்பிராமணருக்கு ஞான விதிப்படி ஆசாரியாபிஷேகம் செய்து பொன்னம்பல

தேசிகர் என்ற நாமமும் சூட்டினர். இருவர்களும் தில்லையில் வசித்துவரும் நாளில் சாமிநாதர் பரிபூரண காலத்தில் பொன்னம் பலவருக்கு மந்திரோபதேசங்கள் செய்து தாம் பூசித்துவந்த பஞ்ச நதேசுவர இலிங்கத்தையுங் கொடுத்து பூசைசெய்து மடாலய பரம் பரையாக உபதேசம் செய்து சைவசமயத்தை வளர்த்து வரும்படி ஆணையிட்டார்.

இங்ஙன மிருக்கு நாளில் தம் பதியாகிய நாகபட்டணத்துக்கு சென்றனர். அங்கு தம் மரபிலுள்ள ஒருவருக்கு குரு ஆணைப்படியே தீக்ஷை அபிஷேகாதிகள் செய்வித்தனர். அவருக்கு கனகசபாபதி தேசிகர் என்று திருநாமம் இட்டு, நகர் வீதியில் பட்டணப்பிர வேசமும் செய்வித்தார்.

இந்த நிகழ்ச்சிகள் "கனகசபைநாதனுலாவில்" விளக்கமாகப் பாடப்பெற்றுள்ளன. இவர்களும் அங்கு சிலநாள் தங்கியிருந்து பின் சிதம்பர தெரிசனத்துக்காக சிதம்பரம் வந்தனர். வந்து நாடோறும் தில்லைக்கூத்தன் தெரிசனமும் சாஸ்திர ஆராய்ச்சி களும் செய்து வசித்து வந்தனர். அப்பொழுது தில்லைக்கூத்தன் பொன்னம்பலதேசிகர் கனவில் தோன்றி இப்பதிக்கு ஒப்பான தலம் தென்திசை பொருநை நதிக்கரையிலுள்ள செப்பறைப் பதியை அடைந்து மடம் அமைத்து சைவசமயத்தைப் பரப்புக என்று சொல்லி மறைந்தனர்.

"இப்பதிக்கு நிகராந் தாம்பிரபர்ணி தீரத்தெமது பஞ்சதலத்தி
லோர் தலமாக விளங்குஞ்

செப்பறை முன் சன்னியாமுதாசனர்க்கரிக்கு நின்றசீர் நெடு
மாறனுக்கு நடஞ்செய்தலாலே

ஒப்பிலாப்பதி காசிகயிலாசம் புலியூர்க்கொக்கு மதனுவிதை
நீ யுண்மையாக்கொண்

டப்பதி சென்றெமைப்போற்றி வசித்தங்கென்று மடிய
வருக்குபதேசஞ்செய் வீரென்றகன்றுர்.

தேசிகர் உடனே ஆச்சரியமுற்று சிஷ்யரிடமும் தெரிவித்தார். பொழுது புலர்ந்ததும் இறைவனை வழிபட்டுச் செப்பறையை நோக்கிப் புறப்பட்டனர். வரும் வழியிலுள்ள திருக்கோவில்களை வணங்கி அருள் பெற்று செப்பறைப்பதியை கி. பி 1560ல் வந் தடைந்தனர் (கொல்லம் 598.) வந்து செப்பறை அழகியகூத்தரைக் கண்டு உளம் உருகி வாயாரப் புகழ்ந்து புளகமுற்றனர். பின்னர் அங்குள்ள அன்பர்கள் இவர்கள் அன்புரிமையையும் விருப்பத் தையும் அறிந்து சந்நிதிக்குக் கீழ்பால் ஒரு மடம் அமைப்பித்து எழுந்தருளச் செய்தனர். இவர்களும் அம்மடத்தில் அமர்ந்து தம்மை நாடியவர்களுக்கு தீக்ஷை உபதேசங்களைச் செய்து சமயத்தை வளர்த்து வந்தனர். அப்படி இருக்கும் காலத்தில் செப்பறை ஆதீன முதற் குருவாகிய பொன்னம்பல தேசிகர் பரிபூரண காலத் தில் கனகசபாபதி தேசிகரை நோக்கி நீ இந்த மடாலய கர்த்தராக இருந்து பரம்பரையை விளக்கி வருவாயாக என்று சொல்லி சித்திரை சுவாதி நாளில் பரிபூரண மடைந்தனர்.

இவர் அவருக்கு ஆலயத்துக்கு புறம்பு மேற்கில் சமாதிசெய்து வைத்தனர். குருவின் பிரிவு பொறுது வருந்திய ஆசாரியர் தம குரு வின் திருவுருவை குருமூர்த்தவடிவாக செம்பில் அமைத்துப் பூசை புரிந்து வந்தனர். அங்ஙனம் இருந்து வரும் காலத்தில் அப்பதி ஆதிசைவர் குலத்தில் தோன்றி வடமொழி தென்மொழி யிலும் புலமை யுற்று நடேசபிரானை அர்ச்சித்து வழிபட்டு வருஞ் சீலராகிய கனகசபாபதி சிவாசாரியர் இந்த மடத்தில் பழகிக் கொண்டு வந்தனர். இருவர்களும் ஒரு நாள் மடத்தை அடுத்து நந்தவனம் அமைக்க நிலத்தைத் திருத்துகையில் நடேசச் செப்புத் திருவுரு அம்பிகையுடன் பூமியில் தோன்றக் கண்டு அதை எடுத்து செப்பறைக் கூத்தன் திருவருள் என்று வியந்து மடத்தில் எழுந் தருளப்பண்ணி வழிபட்டு வருவாராயினர்.

இருவர்களும் சகல சாஸ்திரங்களையும் ஆராய்ச்சி செய்து கொண்டு வந்தார்கள். பின் புதிய கனகசபாபதி தேசிகர் மடாலய

சந்ததி வழி வழி பரப்புவதற்கான குறிப்பை சிவாசாரியரிடம் தெரிவித்தனர். அவரும் அக்கருத்துக்கு ஒத்த நைட்டிக ஆசாரத்தை மேற்கொண்டொழுகலாயினர். துதிய ஆசிரியர் பரிபூரண காலத்தில் மடாலய அதிகாரங்கள் அனைத்தையும் கனகசபாபதி சிவாசாரியரிடம் ஒப்புவித்து நீயும் பரம்பரையை விருத்தி செய்துவரக் கடவாய் என்று சொல்லி ஐப்பசி சுவாதி நாளில் பரிபூரணமடைந்தனர். பின் சமாதிக்கிரியைகளையும் செய்து, மடாலயபூசையும் புரிந்து வந்தார். இவருடைய கல்வித் திறனை அறிந்த பல மாணவர்கள் இவரிடம் கல்வி கற்றுப்போவாராயினர். அவருள் திருவாவடுதுறை ஆதீனம் ஈசான மடத்து சாமிநாத தேசிகரும் வடமொழி பயின்று சென்றனர். இது அத்தேசிகர் இயற்றிய "இலக்கணக்கொத்து" நூற் பாயிரத்துள் அடியில் வரும் துதிப் பாடலால் விளங்கும்.

செப்பறைப் பதியில் வாழ் சிவத்துவிசன்,
கனகசபாபதி கருது வடநூற்கடல்,
தபோதனர் புகழும் சைவாதிராசன்,
உபய பதங்களை உண்மையொடு பணிவாம்.

இவருக்குத் தமிழ் பயிற்றிய புலவர் நெல்லை மயிலேறும் பெருமாள் பிள்ளை ஆவர்.

கனகசபாபதி சிவாசாரியர் ஆசாரியர் கருத்தின்படி மாடலய பரம்பரை விருத்தியை மேற்கொண்டவராயினர். செப்பறைப் பதிக்கு அருகிலுள்ள இராசவல்லிபுரத்தில் தொண்டைமண்டல வம்சத்து வித்துளார் கோத்திரம் புலியூர்க் கோட்டத்தில் அவதரித்த அம்மையப்ப முதலியார் ஒருவர் இருந்துவருவாராயினர். அவரும் இம்மடத்து இந்த ஆசாரியர்பால் ஞான உபதேசம் பெற விரும்பி மடத்தில் பலப்பல பணிகளும் செய்து கொண்டு நடேச பிரானை நாடோறும் தெரிசித்தும் வரலாயினர். இவ்விதம் மடத்தில் தொண்டுகள் புரிந்து வருவதை ஏவலாளர்மூலம் சிவாசாரியர் தெரியலாயினர். தெரிந்ததும் ஏவலாளர் மூலமாக அந்தத் தொண்டரை

அழைத்துவரும்படிச் செய்தனர். அவரும் அது கேட்டு மிக்க மகிழ்ச்சிகொண்டு ஆசாரியர்பால் அணுகினர். அவரும் இவருடன் சம்பாஷணைகள் செய்து, மடத்திலேயே தங்கியிருக்கும்படி தெரிவித்தார். அவரும் அங்ஙனமே இருந்துவரு நாளில் இவருக்கு நிர்வாண தீக்ஷை, உடையவர் பூசையும் எழுந்தருளப் பண்ணிக் கொடுத்தார். இவ்விதம் சில ஆண்டுகள் நிகழ்ந்துவரும்போது சிவாசாரியர் இவர் இல்லறத்திலிருப்பதால் சன்னியாசம் கொடுக்காமல் ஞானவிதிப்படி கி. பி. 1620ல் ஆசாரியாபிஷேகம் செய்து பூசாமூர்த்திகளையும் ஒப்புவித்தனர். பின் பரிபூரணசமயத்தில் ஞான புத்திரருக்கு காஷாய உடை கொடுத்து நீ குருமுகூர்த்த சன்னிதியில் ஞான நெறிப்படி தீக்ஷை அபிஷேகமும் செய்து சிஷ்யர்களை பெருக்கிவரக்கடவாய் என்று கூறி ஆனி உத்திர நாளில் முத்தியடைந்தனர். அவருக்கு இவர் சமாதி செய்து முடித்து மடாதிபத்தியத்தை மேற்கொண்டு ஒழுகலாயினர். பின் அம்மையப்பராகிய பொன்னம்பலர் அங்கு மடத்தின் அருகில் இல்லம்அமைத்து வசிக்கலாயினர். 2-வது ஆசிரியராகிய கனகசபாபதி தேசிகருக்கு நாகையில் நடந்த உலாக்காட்சியை கனகசபைநாதனுலாவாகப் பாடியருளினர். இன்னும் பல தோத்திரங்களும் செய்து பற்பல சிஷ்யர்களுக்கு ஞான உபதேசமும் செய்துள்ளார். இவர் இப்படி இருந்து தனது ஏக புத்திரருக்கு கனகசபாபதி தேசிகர் என்று தீக்ஷா நாமமிட்டு அபிஷேகாதிகள் செய்துவித்தனர். பின் தமது பரிபூரண காலத்தில் தாம் காவி உடை தரித்து சிஷ்யனுக்கும் காவி உடை கொடுத்து மந்திர உபதேசம் செய்து மடாலய பூசை முதலிய சர்வாதிகாரங்களையும் கொடுத்து கி. பி. 1646 ஆனி திருவாதிரை நாளில் பரிபூரண மடைந்தனர். கனக சபாபதி தேசிகர் தமது புத்திரராகிய பொன்னம்பலவருக்கு உபதேசித்து கி. பி. 1681 தை சுவாதி நாளில் பரிபூரண மடைந்தனர்.

பின்னர் பொன்னம்பல தேசிகர் தமது குருவின் பேரில் அந்தாதி பாடியுள்ளார். இவர் 24 வருஷம் மடாதிபத்தியத்தை

நடத்தி வந்துள்ளார். தமது புத்திரர் இந்த மடாலய விஷயங்களில் விருப்பங் கொள்ளாது ஒழுகலாயினர். ஆதலால் தமது சகோதரருக்கு தெக்ஷிணாமூர்த்தி தேசிகர் என்ற நாமத்துடன் அபிஷேகம் செய்து வைத்தனர். இது கண்டதும் மரபிலுள்ள சிலர்களும் ஆசாரியரிடம் தீக்ஷை அபிஷேகாதிகளையும் பெற்று ஒழுகலாயினர். அபிஷேகம் பெற்ற ஒவ்வொருவரும் மடாதிபதியாக விரும்பி ஆசிரியரை நெருங்கினர்.

தங்கள் தங்களுக்கு ஏற்பட்ட இன்னல்களால் வருந்தினர். ஆசிரியரும் சிஷ்யர்களுக்கு துன்பமில்லாதிருக்கவும் மூல குரு ஆணை நிறைவுறும் வண்ணமும், நடேசபெருமானை திருவருள் புரிய வேண்டினர். கூத்தன் அருளால் புத்திரரும் மனம் திரும்பி மடாதிபதியாக விருப்பம் காட்டினர். மற்றவர்களும் துயர் நீங்கினர். மடாதிபதியாக விரும்பிய புத்திரருக்கு தீக்ஷை விவாகம் முதலியதுகள் செய்து அழகிய கூத்தர் என்ற சிறப்புப்பெயரையும் சூட்டினர். பின் பரிபூரண காலத்தில் ஆசாரிய அபிஷேகம் ஆபத்காவியுடைமுதலிய சர்வாதிகாரங்களையும் ஒப்புவித்து கி. பி. 1705 மார்கழி சுவாதி நாளில் பரிபூரணம் அடைந்தனர்.

பின் 1-வது அழகிய கூத்ததேசிகர் 1705 முதல் கி. பி. 1752வரை 47 ஆண்டு அருள்செங்கோல் புரிந்துள்ளார்—கொல்லம் 896 கி. பி. 1721-ல் கார்த்திகை மாதம் 12-ம் தேய்தி சனிக்கிழமை பகலில் பொருநையாற்றில் பெருவெள்ளம் ஏற்பட்டது. வெள்ளத்தில் மடாதிபதி, அர்ச்சகர் முதலிய ஐவர்கள் ஒரு மரத்தில் தங்கி தம்முயிரை காக்க திருவருள் பாலித்தது. வெள்ளம் வடிந்த பின் பார்க்கையில் கூத்தப் பெருமான் கோவிலும் தம் மடமும், புத்திரர் ஆசாரியர் சமாதிகளும் நகரமும் அழிந்து போயின. காட்சி கண்டு மனம் கலங்கினர். பின்னர் தெளிந்து நடேச பெருமான் முதலிய மூகூர்த்தங்களை அருகிலுள்ள இராசை அக்னீசுவரர் ஆலயத்தில் சேர்ப்பித்து பூசை புரிந்து வந்தனர். தமக்கு அங்கு

தம் சுற்றத்தோர்கள் வதிந்த இடத்துக்குப் பக்கம் மடாலயத்தையும் தம் இருக்கையையும் அமைத்துக்கொண்டார்கள். இங்ஙனமிருக்கையில் அவ்வூரிலுள்ளவர்களுக்கும் தனக்கும் பல தீமைகள் நேரலாயின. அதனால் மனம் வருந்தி இருக்கும் நாளில் ஓர் இரவில் நடேசபிரான் கனவில் தோன்றி நீ நம்மை செப்பறை பழைய கோவில் எல்லைப் புறத்தில் ஆலயம் அமைத்து பூசித்து வருவாயாயின் துன்பம் நீங்கி இன்பம் அடைவாய் என்றனர். உடனே ஆசிரியர் சிஷ்ய கோடிகளுக்கு தெரிவித்து அண்மையில் மேல் பாலுள்ள நெல்லையம்பதியில் ஆட்சி புரிந்து வரும் தளவாய் ஆறை அழகப்ப முதலியார் அவர்கள்பால் கடவுள் ஆணையைத் தெரிவித்தனர். அவரும் அதற்கிணங்கி ஆலயம் செய்ய மேற்கொண்டு முன் ஆலயங்களிலுள்ளதுபோல் நடேசபிரானுக்கு செப்பறையுடன் இப்போது விளங்கும் திருக்கோவிலை கெட்டிமுடித்து கொல்லம் 901 ஆண்டுக்கு கி. பி 1726ல் நடேசபிரான் முதலிய பழைய மூர்த்திகளை பிரத்திட்டை செய்து கும்பாபிஷேகம் சிறப்புற நடத்தி வைத்தனர். அத்துடன் பூசா காரியங்களுக்கு வேண்டும் நிபந்தங்களும் ஏற்படுத்தி தேசிகரிடம் ஒப்புவித்தனர். ஆசாரியர் தம்முடைய திருமடத்தையும் ஈசான திசையில் அதே காலத்தில் அமைத்துக்கொண்டனர். செப்பறைப் புதுக் கோவிலின் உள் சுற்றில் மேற்கு முகமாகப் பஞ்ச நதீசுவரர் என்ற ஒரு லிங்கத்தையும் பிரதிட்டை செய்துள்ளார்கள். தம்முடை பூசை இருக்கைகளை இராசவல்லிபுரத்திலேயே வைத்துக்கொண்டு தினமும் செப்பறைக்குப் போய் நடேசபிரானை வழிபட்டு வந்தனர். தம்முடைய மடத்துக்கு பிற்றோன்றல்கள் இல்லாமையை உத்தேசித்து இரண்டாவது விவாகமும் செய்து கொண்டனர். அதில் தோன்றியவரே பின் வரும் சுப்பிரமணிய தேசிகர் ஆவர் ஆசிரியர் தம்முடைய பரிபூரண திசையை கவனித்து சுப்பிரமணியர் தக்த ஆற்றல் இல்லாமையை நினைந்து தமது வம்சத்திலுள்ள ஒருவருக்கு அருணாசல தேசிகர் என்று நாமமிட்டு கி. பி. 1745-ம் ஆண்டு அபிசேகம் செய்து வைத்தனர். பின்

தம் தேக அசௌக்கியத்தைக் கண்டு ஷை அருணாசலருக்கே மடாதி பத்தியத்தை ஒப்புவிக்கக் கருதி தாம் காவி உடை அணிந்து சிஷ்ய ருக்கு மந்திர உபதேசமும் காவி உடையும் கொடுத்து நீ நமது சுப் பிரமணியருக்கே மடாதிபத்தியத்தை ஒப்புவிக்கக் கடவாய் என்று சொல்லி மடாதிபத்திய சர்வஅதிகாரங்களையும் ஒப்புவித்து 1752-ல் புரட்டாசித் திருவாதிரை நாளில் பரிபூரணமடைந்தனர். அருணா சலர் அவருக்கு வெள்ளத்திற்கு முன் பூஜை மடம் இருந்த எல்லை யிலே சமாதி செய்து சிறப்புவித்தார். ஷை தேசிகர் தாம் முன்னரே அன்னபூரணி என்ற தேவியை பூசித்து அத் தேவியருளால் வியக் கத்தக்க அருள்செயல்களையும் புரிந்துவந்துள்ளார். பின் அவ் வருட் தேவியை மடாலய பூஜா மூர்த்திகளுடன் பூஜித்து வருவாராயினர். 1755-ல் ஷை சுப்பிரமணியருக்கு சுப்பிரமணிய தேசிகர் என்ற பெய ருடன் ஆச்சாரியர் அபிசேகம் செய்துவைத்தனர். அவர் 1757ம் ஆண்டில் சின்னப் பட்டத்திலிருக்கும்பொழுதே பரிபூரணமடைந் தனர். அவருக்கு முன் ஆசிரியர் சமாதிக்குப் பக்கமே சமாதி செய்துவைத்தனர். பின்னர் விருத்தாசலத்திலிருந்து இவ்விடம் யாத்திரையாக வந்த பழமலைநாத கவிராயருக்கு அவர் விருப்பத் தின்படி ஆச்சாரியா அபிசேகம் செய்து அவரை பிரதம சிஷ்யரா கக் கொண்டனர். ஷை கவிராயர் கிழக்கே அண்மையில் உள்ள சிவலப்பேரியில் தங்கி வருவாராயினர். அருணாசல தேசிகர் செப் பறை நடராசர் மீதும், ராஜை திரு அக்கினீசுவரர் மீதிலும் "வண் ணம்" முதலிய துதிப்பாடல்களும் பாடியுள்ளார்கள். இவர் தமது புத்திரராகிய அழகிய கூத்த தேசிகருக்கே அபிசேகம் செய்து தமது ஆபத் காலத்தில் தாம் காவி உடை தரித்து புத்திரனுக்கும் மந்திர உபதேசமும் காவி உடையும் கொடுத்து கொல்லம் 952-க்கு சரி யான கி. பி. 1777 மார்கழி சுவாதி நாளில் பரிபூரணமடைந்தனர்.

அழகியகூத்த தேசிகர் மடாதிபத்தியத்தை நடத்திவரும் காலத் தில் நடேசபிரானுக்கு வெள்ளத்திற்குப் பின் இரதம் இல்லாதிருந்த தால் அதைப் பூர்த்தி செய்ய விரும்பி மரங்கள் தருவிக்க மலையாளம்

போயிருந்த காலையில் பூஜை பெட்டகம் காணுது போயிற்று. உடனே ஆசிரியர் மனம் வருந்தி நடேசபிரானை துதிக்கலாயினர். பின்பு அப் பெட்டகத்தை மூர்த்திகளுடன் திரும்பப் பெற்றார். அத்துடன் சில மரங்கள் சேகரித்து அடியார்களுடன் செப்பறைக் குத் திரும்பலாயினர். இங்கு வந்து நடேசபிரான் மீது உலாப் பிரபந்தமும் தோத்திரப் பாடல்களும் பாடியருளினுர். தேவஸ்தா னங்களுக்கு திட்டம் ஏற்படுத்திய தானப்ப முதலியார் முதலியோர் கள் சிஷ்யராய் இருந்தார்கள். பின் தமது ஏக புத்திரனுகிய அருணு சல தேசிகர் 12வயதுடையவராய் இருந்தமையாலும் தம்முடைய பரி பூரண நேரத்தில் நடேசபிரானை அர்ச்சிக்கும் ஆதி சைவரை வர வழைத்து பக்கத்தில் இருக்கவைத்து தாம் மனதினுல் அபிசேகம் முதலியன புரிந்து ஆதிசைவரிடம் பின்னர் அபிசேகம்செய்யக் கட் டளையிட்டு மடாதிபத்தியங்களை அருணுசலரிடம் ஒப்புவிக்கும்படி செய்து 992ம் ஆண்டுக்கு கி.பி. 1817 பங்குனி மீ உத்திராட நட் சத்திரத்தில் பரிபூரண திசை எய்தினர். பின்பு அருணுசலர் முற் குறித்த கவிராயர் வமிசத்தில் உள்ளவரை உடன் வைத்துக் கொண்டு ஆசிரியர் சமாதிக் கிரியைகளை சிறப்புடன் செய்துவித்த னர். மேற்குறித்த ஆதி சைவர் இவருக்கு அபிடேகாதிகளைச் செய்து மடாலய பரம்பரை விஷயங்களையும் சொல்லி மடாதிபத்தி யத்தை நடத்திவரும்படி செய்வித்தார். ஆசிரியர் தம்முடைய இளமையையும் மடாலய பெருமைகளையும், நோக்கி, கவலையுற்று நடேசபிரான் ஆலயத்திற்கு முன்னதாக அமைந்த ஓலை வேய்ந்த கொட்டகையில் சயனிக்கலாயினர். அது சமயம், நடேசபிரான் கனவில் தோன்றி "அஞ்சற்க! எல்லாவற்றையும் செய்யும் ஆற் றல் பெருவாய்" என்று சொல்லி மறைந்தனர். இவர் தில்லை சென்று அண்ணுமலை வழியாய் திருக்காளத்தி வரை யாத்திரை செய்து சிவத் தலங்கள் பலவற்றையும் தரிசித்து செப்பரைக்குத் திரும்பினர். [தம் ஞானாசிரியர் காலத்தில் நடேச பிரானுக்கு ரத வேலை ஆரம்பித்து முடிவுபெருது இருந்ததை ஆரம்பித்து முடிவு

செய்து கி. பி. 1844ல் ரதோற்சவம் செய்தனர். கி. பி, 1824ல் செப்பறையிலுள்ள கற்பூஜை மடத்துக்கு முன்னல் இப்போது காணப்பெறும் கல் மண்டபமும் மடைப்புள்ளியும் கட்டினார்கள். — கி. பி. 1847ல் தமது புத்திரர் அழகிய கூத்தருக்கு க்ஷணிகலிக்க பூஜை செய்து வைத்தார். கி. பி. 1848 முதல் சித்திரைத் திருநாளாக இருந்ததை சிதம்பரம் போல் ஆனி உத்திரத் திருநாளாக அமைத்து நடத்திவைக்கலானார். கி பி. 1855 சித்திரையில் வசந்தோற்சவத்தையும் நெல்லையப்பர் காந்திமதியம்மைக்கு திருக்கல்யாணச் சிறப்பையும் செய்வித்துள்ளார். கி. பி. 1870ல் ராஜவல்லிபுரம் மடாலய முகப்பில் விஸ்தாரமான ஒரு கொட்டகையும் கட்டி முடித்தனர். மீண்டும் தில்லை முதல் திருக்காளத்தி வரையும் யாத்திரை செய்தனர். மலைபாளத்துக்குப் போய் இரண்டு கொடி மரங்கள் கொண்டுவந்து ஒன்றைச் செப்பறையிலும் மற்றொன்றை அகிலாண்டநாயகி ஆலயத்திலும் பிரதிஷ்டை செய்தனர். செப்பறை ஆலயத்தில் பல கல் மண்டபத் திருப்பணிகளும் செய்து குமரி முதல் காளத்தி பரியந்தம் மூன்ருவது முறையாகச் சென்று தரிசித்து வரும் வழியில் நாயன்மார்களால் பாடல் பெற்ற பல திருக்கோவில்களையும் சென்று வழிபட்டுச் செப்பறைக்குத் திரும்பி வருவாராயினர். இவர்கள் காலத்தில் தொண்டைமான் புதுக்கோட்டை முதலிய பல ஊர்களில் சிஷ்யர்கள் இருந்துவந்ததால் ஆங்காங்கு சென்று தீக்ஷா உபதேசங்கள் செய்து சிஷ்யர்களைப் பெருக்கியுள்ளார். கடைசியாக தமது ஆசிரியர் குருபூஜா தினத்திற்கு முன் தேக அசௌக்கியம் கண்டு குருபூஜையைச் சுருக்கமாக நடத்தித் தமது புத்திரர் அழகியகூத்த தேசிகர் பல காலம் செப்பறையிலே நிட்டையிலும் மௌனத்திலும் இருந்தும் சிதம்பர யாத்திரையும் செய்து வந்தவரை அழைத்து பரம்பரை வழக்கப்படி சர்வாதிகாரங்களையும் ஒப்புவித்து 57 ஆண்டு அருளாட்சி செய்தபின் கி. பி. 1874 பங்குனி உத்திரட்டாதியில் பரிபூரணம் அடைந்தனர்.

3-வது அழகிய கூத்தர் தமது குருவுக்கு சமாதி முதலிய எல்லாக் கிரியைகளையுஞ் செய்து மடாலய பூசைகளையும் சிறப்புறவே நடத்தி வந்தனர். இடை இடையே தொடர்ந்து பலமுறை செப்பறையிலேயே தங்கி பூசை செய்து மௌன நிலையிலுமிருந்து வருபவாரானுர். தமது இரண்டு புத்திரர்களுக்கும் ஏக காலத்தில் திருமணம் முடிப்பித்தார். மூத்தகுமாரர் திருவாவடுதுறை ஆதீனம் மேலகரம் சுப்பிரமணிய தேசிகரிடம் அபிஷேகம் பெற்று கல்லிடைக் குரிச்சியில் சின்னப்பட்டமாக வீற்றிருந்த திரு. நமசிவாய சுவாமிகளிடமும் கலியுக வரதநாமநல்லூர் முதலியாரிடமும் கல்வி கற்று தேர்ந்தவர். இவருக்கு பொன்னம்பல தேசிகர் என்ற நாமத்துடன் கி. பி. 1880 ம் வருடம ஆசாரியபிஷேகம் செய்து வைத்தனர். அவரும் கல்வியறிவிற் சிறந்தவராய் விளங்கி இந்த மடாலய பரம்பரையை முன் பொருநை யாற்றுப் பெருவெள்ளத்திற்கு முன் இருந்த ஆசாரியர் பாடிவைத்த பாடல்களை எல்லாம்புதிய ஓலைச் சுவடியில் எழுதியும், அதற்குப்பின் உள்ள சரித்திர குறிப்புகளை தமது ஆசாரியர் சொல்லிபபடி வசனமாக ஓலைச்சுவடியில் எழுதியும் வைத்துள்ளார். இவரே பெரும்பாலும் மடாலய பூசையை செய்து வருவாராயினர்.

அழகியகூத்த தேசிகர் செப்பறை மடத்தில் மௌனநிலை கொண்டிருந்த காலத்தில் அவருக்கு அவர் மைத்துனர் ஸ்ரீவல்லி புத்தூர் திரு. அம்பலநாத முதலியார் அணுக்கத் தொண்டு புரிந்து வருவாராயினர். ஒருகால் செப்பறைத் திருக்கோவிலில் திருடர்கள் காவலாளனை பிள்ளையாகக் கட்டி நிறுத்தி உள்ளே புகுந்தனர். காவலாளன் சாமர்த்தியமாக நகர்ந்து நகர்ந்து மௌன நிலையில் செப்பறை மடத்தில் தங்கி வந்த தேசிகர்பால் தெரிவித்தனன். இவ்வடாத செயலைக் கேட்ட தேசிகர் ஆவேசமுற்று மௌனங் கலைந்து ருசை நகர் வந்து அங்குள்ளவர்களைத் திரட்டி வந்த செய்தி தெரிந்த திருடர்கள் கைக்கெட்டிய பொருள்களை கைக் கொண்டு ஓடி விட்டனர். பொன்னம்பல தேசிகரே மடாலயக்

காரியங்களை எல்லாம் கவனித்து மடாலய விருத்திக்கான பல நன்மைகளையும் செய்து வைத்தனர். இவர் சின்னப் பட்டத்திலிருந்தபடியே தமது ஆசாரியரிடம் காவியுடை பெற்று கி. பி. 1894 ல் ஆனிஅஸ்த நாளில் பரிபூரணமாயினர். இவருக்கும் சுப்பிரமணிய தேசிகர் சமாதிக்கு தென்புறம் சமாதி செய்து வைக்கப்பெற்றது, அழகியகூத்த தேசிகர் பெரும்பாலும் மௌனம். யாத்திரை பூசை இவைகளிலேயே கருத்து செலுத்தி வந்தமையினால் இந்த மடத்துக்கு வரவேண்டிய வற்றில் முன்னீர்பள்ளம் கிராமத்தில் ஆண்டு ஒன்றுக்கு 24 கோட்டை, மேல் வார ரொக்க மானிபமும். சர்க்கார் ரொக்க மானிபங்களும் பல ஆண்டுகள் வாங்கப் பெறாத நிலைமையில் நின்று போயின.

இவர்கள் காலத்தில் செப்பறை நடேசபிரானுக்கு வெள்ளத்துக்குப் பின் கட்டிய ஆலயத்திலுள்ள கல்லால் அமைந்த அறையை இடித்து சிதம்பரம் போல் சிற்சபையும் கனகசபையுமாக கருங்கல்லினால் மதில் எழுப்பி பாவுகல்லு மிட்டு மூரப்பனுடு சம்பிருதி பிள்ளை முயற்ச்சியால் கி. பி. 1888 ல் முற்றுவிக்கப் பெற்றது ஆசாரியர் தேக மெலிவு கண்டு தமது மூத்த குமாரராகிய சின்னப்பட்டம் பொன்னம்பல தேசிகரின் மூத்த புதல்வர் அருணாசலத்துக்கு சமய விசேடதிக்கைகள் செய்து கொடுத்து அபிஷேகம் செய்ய சமயமில்லாததினால் இளைய குமாரருக்கு கனகசபாபதி தேசிகர் என்ற தீக்ஷா நாமத்துடன் ஆசாரிய அபிஷேகம் செய்து சர்வாதிகாரங்களையும் கொடுத்தனர். கி பி. 1899 புரட்டாசி சுவாதி நாளில் பரிபூரணமடைந்தனர். தாம் பரிபூரணம் ஆகும் நாளை தம் சோதிட ஆராய்ச்சி நுட்பத்தால் இந்த நாள் என்று கவனித்து வைத்திருந்தனர். நேரம் சமீபித்ததும் காவி உடைதரித்து ஆதீன அங்க உருத்திராக்கங்களை அணிந்து விபூதி தரித்து பக்தர்களுக்கும் தொடுத்து சிவநாமம் சொல்லிக்கொண்டே 1899புரட்டாசி சுவாதிநாளில் பரிபூரணம்அடைந்தனர் பின் கனகசபாபதி தேசிகர் அவருக்கு சமாதி செய்வித்து குருபூசை முதலிய

வற்றையும் செய்து சமாதிக்கு கல்வரி அமைப்பித்து அழகுசெய்த னர். செப்பறை திருக்கோவிலுக்கு நாடோறும் காலை மாலைபோய் தவறாது தெரிசனம் செய்து வந்துள்ளார். தம் சகோதரரின் மூத்த குமாரர் அருணாசலருக்கு கி. பி. 1904 ல் சபீச பௌதீக நிர்வாண தீக்கையும் உடையவர் பூசையும் செய்து கொடுத்தனர். இருவர் களும் மடாலய காரியங்களை சிறப்புற கவனித்து வருவாராயினர் கி.பி. 1907 ல் தம் முதல் குரு பொன்னம்பலவர் குருபூசை நாளில் அருணாசலருக்கு ஆசாரியாபிஷேகம் செய்துவைத்தனர். இவர் இந்த மடத்தில் தங்கியிருந்த யாழ்ப்பாணம் சிதம்பர சுவாமி என்ற செப்பறைச் சுவாமிகளுடன் சித்தாந்த சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து வடமொழி திரிகூடாசலமான்மியத்திலுள்ள செப்பறைத் தல விசேடத்தை மொழிபெயர்த்து செப்பறை மான்மியம் என்ற பெயருடன் தமிழில் அச்சிட்டுமிருக்கிறார். தம் பரம்பரை சிஷ்ய கூட்டத்தாராகிய, கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களுக்கு அவர் கருத்துப்படி ஸ்ரீ தெக்ஷிணாமூர்த்தி பூசை எழுந்தருளிப் பண்ணிக் கொடுத்துள்ளார். இவர்களிடம் ரா. பி சேதுப்பிள்ளை அவர்களும் சில சிற்றிலக்கிய பாடங்கள் பயின்றுள்ளார். இருகுரு மூர்த்திக ளும் செப்பறை நடேசப் பெருமான் கோவிலுக்கும் இம்மடாலயத்துக் கும் செய்துள்ள தொண்டுகள் பல. அவை பின் வருமாறு. 1. சபைமுன் மண்டபத்தை இடித்து கூப்பு கைமண்டபமாக அமைத்தது. 2. அக்கினி தேவருக்கும், திருமாலுக்கும் அழகிய கூத்தர் காட்டியருளிய நடனக் காட்சி வைபவத்தை கி. பி. 1908 முதல் நிதியுடன் நடப்பித்தது ஐதீகப்படி இவ்வைபவம் கங்கை கொண்டான் தலத்திலும இரண்டு ஆண்டு நடத்தியது. 3. கார்த் திகை சோமவாரக் கட்டளை நடைபெறும் சொத்துரிமைக் காப்பு. 4. சமையாசாரியர், அக்கினிதேவர், அகத்தியர். திருமால் இவர்களின் செப்புருவங்கள் அமைப்பு. 5. 1909 மார்கழி திருநாளில் காலை யிலும மாலையிலும் நடனதீபாரதனை நடைபெறச் செய்தல். 6. இடையில் நடவாமல் நின்ற நெல்லையப்பர் - காந்திமதியம்மை

திருக்கலியாணச் சிறப்பை நடைபெற்றுவாச் செய்தல். 7. இராஜையிலுள்ள பூஜை மடத்தை பிரகாரங்களுடன் விரிவாக கல் கட்டிடமாகக் கெட்டி 1912 சித்திரை மிருகசீரிஷ நாளில் கும்பாபி ஷேகமும் செய்வித்தது. 8 சம்பந்தர், மெய்கண்டதேவர் இவர் களை செப்புச்சிலையில் மடத்தில் அமைத்தல். 9. மடாலய நூல் நிலையத்திலுள்ள திருக்காளத்திப் புராண ஏட்டுச் சுவடியை உ. வே. சாமிநாத அய்யருக்கு அச்சிட உதவியது. 10. கனக சபை நாத னுலா செப்பறை உலா இவற்றை படிஎடுத்து வைத்தது. 1912 ல் கனக சபாபதி தேசிகர் 4 வது அழகியகூத்த தேசிகருடன் திருக்காளத்தி வரை பல சிவத்தலங்களையும் தெரிசித்து வந்தனர். பின் தம் பரிபூரண நெருக்க காலத்தில் அருணாசல தேசிகரிடம் இவ்வாதீன சம்பிரதாயப்படி எல்லா அதிகாரமும கொடுத்து மந் திர உபதேசம் செய்து 1913 தை சுவாதி நாளில் பரிபூரணமாயி னர். பின் பட்டத்தவரான 3 வது அருஞ்சல தேசிகர் ஆசிரி யருக்கு சமாதிக்கிரியைகளை சிறப்புறச் செய்து மடாலய பூசாகைங் கிரியங்களையும் மேற்கொண்டனர்.

இவர் ஆதீனகர்த்தராக விளங்கிவந்த இரண்டுஆண்டிலும் இடை இடையே நோய்வாய்ப் பட்டிருந்தும் அதனைப் பொருட்படுத்தாது முந்திய குருமார்கள் பாடிவைத்த செய்யுள் குறிப்புகளைக் ஆதாரமா கக் கொண்டு மடாலய வரலாற்றை செய்யுள் நடையிலும் உரை நடையிலும் அமைத்துள்ளார். வடமொழி ஆகமங்களை ஓலைச்சுவடி யில் படி எடுத்து வைத்துள்ளார். பெரும்பாலும் செப்பறை பதியையே தம் உறைவிடமாகக் கொண்டிருந்தனர். இந் நோயி டையும் தில்லை சென்று தெரிசிக்க விரும்பிச் சென்று திரும்புகை யில் மதுரை அரசாங்க மருத்துவ நிபுணர், சிகிச்சை தம் பூஜைக்கு முட்டாகுமென்று வெறுத்து வந்தனர்.

1915 ஆனந்த வருஷம் மாசி இறுதி நாளில் வந்த சிவன் ரூத்திரி தினத்தில் மடாலயத்தில் நான்கு யாம பூஜையும் முடித்து

செப்பறைக்கு சென்று நடேச பிரானை தெரிசித்து மறுநாள் பூசையும் முடித்து அன்று இரவில் தம் சரீர அசதி கண்டு நள்ளிரவில் அழகியகூத்த தேசிகரை அழைத்து அண்மையில் இருக்க வைத்து இம்மடம் நம் பெரியோர்களால் போற்றப்பட்டும் பூசிக்கப் பட்டும் வருகிற பெருமையை உடையது. நீ விதிமுறை பிறழாது மடாலயத் தலைமை பூண்டு நன்கு ஆட்சி செய்து வர வேண்டும் என்று அறிவுறுத்தி மானசீக அபிஷேகமும் மந்திர உபதேசமும் செய்தார். அருணோதய காலத்தில் தாம் சாய்வுநாற்காலியில் அமர்ந்திருந்தபடியே சன்னதிமுன் கொண்டு வைக்கப் பணித்தார். பின் பூசைமடத்தில் குருமூர்த்திக்கு கர்ப்பூர ஆரதனை செய்ய ஏவினர் காவியுடையுமணிந்தனர். கற்பூர ஆராதனை நடைபெறுங் காலத்தே சதாசிவம் சதாசிவம் என்று சொல்லிக்கொண்டே இறைவனடி அணைந்தனர். அன்று பங்குனி. ஒன்று பூரட்டாதி நன்னாள். பட்டம் ஏற்கும் 4 வது அழகியகூத்த தேசிகர் உடனே ஆசிரியரை திருநீற்று முழுக்கு ஆட்டி சிட்டை நிலையில் இருத்தினர். பின்னர் அபிஷேகாதி தீபாராதனை சடங்குகள் செய்து தேகலிங்கத்தை நகர் வலமாக செப்பறைக்கு எழுந்தருளப் பண்ணி மடாலய சமாதி நிலத்தில் முறைப்படி சமாதி செய்தனர். 10 நாள் குருபூசையன்று பூசாமூர்த்திகளை இராசை மடத்திலிருந்து செப்பறை மடத்துக்கு எழுந்தருளப்பண்ணி அங்கு 3 வது கனகசபாபதி சிவாசாரியார் சந்ததியில் வந்த காந்திமதிநாத சிவாசாரியர் அழகியகூத்த தேசிகருக்கு ஞான விதிப்படி ஆசாரிய அபிஷேகம் செய்தனர். அழகியகூத்த தேசிகர் செப்பறை திருக்கோயில் அழகியகூத்தரை வழிபட்டு சிவிகாரூடராய் இராசைமடம் அடைந்து பூசாமூர்த்திகளுக்கு விசேட அபிஷேக ஆராதனைகள் செய்து மாகேசுவர பூசையும் நடப்பித்தனர். இரவில் சிவிகையில் பட்டணப் பிரவேசமாய் சமாதி, அக்னீசுவரர் அகிலாண்ட நாயகியை வழிபட்டு மடம் அடைந்து சிஷ்யர்களுக்கு அருள் பிரசாதம் வழங்கினர். இம் மடத்தில் தங்கி வருபவரான செப்பறை சிதம்பர சுவாமிகள் குருசை

திருவள்ளுவர் மடம் ந. சங்கரசுப்பிரமணிய பிள்ளை இவர்களுடன் வடமொழி, ஒன்மொழி கலைகள் பயின்றுவலரலாயினர். கி. பி. 1917 ஆவணி மாதத்தில் திருமணம் செய்துகொண்டார் இவரும் முன்னவர் போலவே நடேசபிரான் ஆலயத்துக்கும், மடாலயத்துக்கும் பலவகைப் பணிகள் புரிந்துள்ளார். அவை அடியில் வருமாறு.

1. கூப்புகை மண்டபத்துக்கு முன் ஆனைக்கால் மண்டபம் அமைப்பு, 2. நடேசபிரான் எழுந்தருளியிருக்கும் சபையின் மேலுள்ள பாவுகற்களை நீக்கி தேக்கு உத்திரம் கைகள் அமைத்து செப்போடு இட்டு சிதம்பரம் சிற்சபை போல் ஆக்குதல் 3. 18—5—1921. வைகாசி அஸ்த நாளில் ஸ்ரீ நெல்லையப்பர் காந்திமதி அம்மைக்கும், சபைக்கும், மற்றும் பரிவார மூர்த்திகட்கும் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்வித்தல். 4. 1937 ல் மெய்கண்டதேவர் சிலைத்திருவுரு அமைப்பு. 5. 1922 முதல் செப்பறை ருசவல்லிபுரம் கோவில்களின் அறநிலயத்தவராக அமர்ந்த ஆறு ஆண்டு காலத்தில் இராசை அக்னீசுவரர் ஆலயத்தில் செப்பனீட்டு திருப்பணிகள் செய்து 11—7—1924 ஆனி சுவாதி நாளில் எல்லா மூர்த்தி கட்கும் பஞ்சபந்த கும்பாபிஷேகம் செய்வித்தல். 6. பின் 1929 முதல் 1939 முடிய ஷை ஆலயங்களில் அறநிலயத் தலைவராக அமர்ந்தும் பல திருப்பணிகள் செய்தமை. 7. கங்கைகொண்டான் கைலாசநாதர் கோவில் அறநிலயத் தலைவராக 1933 முதல் 10 ஆண்டுகள் இருந்து வந்த காலத்தில் தேவையான பல திருப்பணிகள் செய்தமை. பூசாதிருத்தம் செய்தல். அக்னிதேவர் செப்புருவம் அமைப்பு. நின்றுபோன விழாக்களை மீட்டும் நடத்தி தேரோட்டமும் ஏற்படுத்தல். 8. மணிப்படை மூன்றீஸ்வரமுடையார் கோவில் அறநிலயத் தலைவராக 1937 முதல் 10 ஆண்டு காலத்தில் விசித்திர சிற்ப வேலைப் பாடமைந்த அழகிய கர்பக்கிரகம் சுத்து மதில் சிதைவுற்ற காரணத்தால் பாதுகாப்பு இன்றி இருந்தன. மதில் செப்பனிட்டு திருப்பணிகள் புரிந்து நல் நிலையில் அமைத்தது, ஆவணி ஓண நாளில்

அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்வித்தது. 9. நித்தியல் பூசை நைவேதன முதலியவற்றிற்காக நிலேயான நஞ்சை நிலம் கோவில் நிதியிலிருந்து வாங்கி உதவியது.

முதல்முறை 1926 ல் காசி வரை யாத்திரை புரிந்துள்ளார். இடை இடையே சிவத்தலங்கள் பலவும் சென்று வழிபட்டுத் திரும்பும் இயல்பினர்.

இரண்டாவது முறையாக 1931 ல் காசி, அரித்துவாரம், துவாரகை, திருகோகர்ணம் முதலிய இடங்களுக்குப் போய் தெரிசனம் செய்து வந்துள்ளார். மடாலய நூல் நிலயத்திலுள்ள இக் கோய் எழுபதில் இதற்கு முன் அச்சிட்ட பிரதியில் விடுபட்ட 15 பாட்டுக்களே திருவள்ளுவர் மடத்து வெளியீடாக அச்சிடும்படி செய்தல். ஞானமிர்தம் உரையுடன் உள்ள நூலே அச்சிடுவதற்கு கலாநிதி ஔவை துரைசாமிப் பிள்ளே அவர்களுக்கு ஏடு உதவியது.

சூரியஞர் கோவில் ஆதீனம் இலக்கணம் முத்துக்குமாரத் தம்பிரான் அவர்கள் சிதம்பரத்தில் அமைத்துள்ள நூல் நிலேய கழக நிரந்தரத் தலேவராக அமர்ந்து பல தொண்டாற்றி வருதல். பாடல் பெற்ற சிவத்தலங்கள் பலவற்றிலும் சென்று வழிபட்டு வரும் பான்மையர். கொரடாச்சேரி வாலேயானந்தம் என்ற சச்சிதானந்த தேசிக சுவாமிகளும் சித்தாந்தப் படம் அச்சிடுவதற்கு வேண்டும் ஏட்டுச் சுவடிகள் கொடுத்து உதவிப் போற்றியது. இம் மடாதிபதிக்கு மாமூல்படி ஆலய முதல் மரியாதை பிரசாதம் முதலியவை ஒழுங்காகக் கொடுத்து வரும்படி நீதிமன்றவழி 1956 ல் தீர்ப்பு பெற்றிருப்பது. 1957 ல் நடந்த ரூசை கும்பாபிஷேகத்தில் சிவ ஞான சுவாமிகள் கல் திருவுரு முன்னமே ஆக்கப்பட்ட திருவுருவை நிறுவியுள்ளார். இன்னும் செப்பறை கோவிலில் விரிவாக நடைபெறுகின்ற திருப்பணிக்கழகத் தலேவராகவுமிருந்து நற்பணி புரிந்து வருகின்ருர். செப்பறைத் திருக்கோவிலும் செப்பறை மடாதீனமும் வாழையடி வாழையாக பன்நலனும் பெற்று சிறந்து வளர்வதற்கு ஆவன புரிவதில் இடையரு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிருர்.

# குரு தோத்திரம்

திருநந்திகேசுரர்நற் சத்திய மெய்ஞ் ஞான
தரிசனிகள் பரஞ்சோதி
மாமுனிகள் வெண்ணை, வருகுரு மெய்கண்டமுனி
யருள்நந்தி சாமி
மறைஞான சம்பந்தர் வளர்ஞான பானு
வுருவென வந்திடும் மச்சிலுறை வணிகயோகி
யோங்கு சந்திரசேகரர்
பின்புறு சாமிநாத, ரருள்பெறு பொன்னம்பல
சற்குருசாமியிவர்க
ளடியிணைகள் நமது சிரமதினில் வைத்திடுவோம்.

கறைமிடறும் நுதல் விழியுமதி மௌலியுங்கரந்துகைலை
நீங்கி
யிறைவர் சிவசமயம்வளர்ந்தேற அடியார்கள்
பேரின்பமெய்த
அறைதரு மும்மலமகற்றுங் குருமூர்த்தவடிவாய்
நீடுழிவாழ்செப்
பறைவளர் ஞானக்கதிர் பொன்னம்பல தேசிகர்
மலர்த்தாள் மனத்துள் வைப்பாம்.



